# தி. தி. தேவஸ்தான முக்கிய விவரங்கள்

* * *

தலைவர், தி. தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக்குழு திரு. சி. அன்னாராவ், பி. ஏ.,

## பொறுப்பாண்மைக்குழு உறுப்பினர்கள்

1. திரு. எஸ்.பி. நாகிரெட்டி, எம்.எல்.ஏ.
2. ,, வி. ராமசுவாமிரெட்டி,
3. ,, ஜி. ராமசந்திராரெட்டி,
4. ,, சி. ராமலிங்கேஸ்வரராவ்,
5. ,, டி. என். ராஜு
6. திரு. மாகணடி அங்கிநீடு, எம்.எல்.ஏ.
7. ,, எஸ். ராதாகிருஷ்ணா
8. ,, எல். நாராயணா, எம்.எல்.ஏ.
9. திருமதி. ஜி. கமலாதேவி, எம்.எல்.ஏ.
10. ,, சுமித்ராதேவி, எம்.எல்.ஏ.

செயலாட்சி சிறப்பாசிரியர் தலைவர் :-

திரு. பி. எஸ். இராஜகோபாலராஜு, பி. ஏ., பி. எல்.,

★

## யாத்திரிகர்கள் விவரம்

பிப்ரவரி, **1975**

| | | |
|---|---|---|
| மலைவழிச்சாலையில், T. T. D. பேருந்துகளில் பயணம் செய்த யாத்திரிகர்கள் எண்ணிக்கை | பெரியோர் | ... 4,66,201 |
| | சிறுவர் | ... 52,630 |
| சத்திரங்களில் தங்கிய யாத்திரிகர்கள் எண்ணிக்கை | திருப்பதியில் | ... 1,01,504 |
| | திருமலையில் | .. 1,74,414 |
| திருமலைக்கு, மலைவழிச்சாலையில் சென்ற ஊர்திகளின் எண்ணிக்கை | மோட்டார் கார்கள் | ... 5,616 |
| | மோட்டார் சைக்கிள்கள் | .. 273 |

---



# திருப்பதி ஸ்ரீ கோவிந்தராஜஸ்வாமி பிரம்மோத்ஸவம்

* * *

## உற்சவ காலங்கள்

| தேதி | பகல் உற்சவங்கள் | இரவு உற்சவங்கள் |
|---|---|---|
| 16-5-75 | ——— | அங்குரார்ப்பணம்<br>சேனாதிபதி உற்சவம் |
| 17-5-75 | திருச்சி உற்சவம், த்வஜாரோஹணம் | பெரிய சேஷ வாஹனம் |
| 18-5-75 | சிறிய சேஷ வாஹனம் | ஹம்ஸ வாஹனம் |
| 19-5-75 | ஸிம்ஹ வாஹனம் | முத்துப்பந்தல் வாஹனம் |
| 20-5-75 | கல்பவிருக்ஷ வாஹனம் | ஸர்வபூபால வாஹனம் |
| 21-5-75 | பல்லக்கில் மோஹினி அவதார உற்சவம் | கருட வாஹனம் |
| 22-5-75 | ஹநுமந்த வாஹனம், மாலே வஸந்தோற்சவம் | யானை வாஹனம் |
| 23-5-75 | ஸூரியப்பிரபை வாஹனம் | சந்திரப்பிரபை |
| 24-5-75 | ரதோத்ஸவம் | குதிரை வாஹனம் |
| 25-5-75 | பல்லக்கு உற்சவம், தீர்த்தவாரி,<br>அவப்பிரதோற்சவம், சக்கர ஸ்நானம் | திருச்சியில் த்வஜாவரோஹன உற்சவம் |



# ஸப்தகிரி

மலர்: 5] ஏப்ரல் 1975 [ இதழ்: 11

சிறப்பாசிரியர்,
பி.எஸ். ராஜகோபாலராஜு, பி.ஏ.பி.எல்.,
செயலாட்சித்தலைவர்,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

★

ஆசிரியர்:
கே. சுப்பாராவ், எம். ஏ.
திருமலை - திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

★

அச்சிடுபவர்:
எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி. தி. தேவஸ்தானம் அச்சகம், திருப்பதி.

★

ஆண்டுச் சந்தா ரூ. 6/-
தனிப் பிரதி 50 பை

மாத இதழுக்கும்,
மற்றும் இதர விபரங்களுக்கும்:

ஆசிரியர்,
திருமலை-திருப்பதி தேவஸ்தானம்,
திருப்பதி.

## பொருளடக்கம்







'சில தவிர்க்க முடியாத காரணங்களினால் இதழை குறிப்பிட்ட தேதியில் வெளியிட முடியவில்லை என்பதை மிகவும் வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கின்றோம்.

ஆசிரியர்.

# ஆசிரியர் உரை

'ஆனந்தா' வருடம் உருண்டோடி விட்டது. புதிய வருடம் 'இராக்ஷஸ' அடியெடுத்து வைத்துள்ளது. பெயர்களே, பொருள்களின் குறியீடாக அமைவதாக இருந்தால், தி. தி. தேவஸ்தானம் பொறுத்தவரை, ஆனந்தாவருடம் அதன் பெயர்க்கேற்றாற்போல் ஆனந்தமாகத் திகழவில்லை அவ்வருடத்தின் ஆரம்பத்திலும், இறுதியிலும் நடந்த பயங்கரமான இரண்டு மலைச்சாலை பேருந்து விபத்துக்கள், மிகுந்த துன்பத்தை ஏற்படுத்தி விட்டன. ஆகவே, 'இராக்ஷஸ' என்ற இவ்வருடம் அதன் பெயர்க்கேற்றாற்போல், அச்சம் ஊட்டுவதாக அமையாது இருக்கட்டும்.

ஆனால் ஒரு வகையில், 'ஆனந்த' வருடமும் 'இராக்ஷஸ' வருடமும் மகிழ்ச்சிகரமானதோர் முடிவையும், ஆரம்பத்தையும் கொண்டு விளங்கின. எல்லாம் வல்ல, எங்கும் உள்ள, அவ்வேழுமலைகளில் உறையும் அவ்வேங்கடவன் தன் மகிமையை மூன்று கடல்களைக் கடந்து ஒளிரச் செய்துள்ளான். ஆம்! இந்து கோயில் குழுவின் ஆதரவில், அமெரிக்காவில் பிட்ஸ்பர்க்கில், திருவேங்கடவனின் கோயில் ஒன்று கட்டப்பட்டு வருகின்றது. இதற்காக, தி. தி. தேவஸ்தானம் கணிசமான அளவில் பொருள் வடிவில் நன்கொடை வழங்கியுள்ளது. இவ்விஷயத்தில் தி. தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவரும், தி. தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக் குழுத்தலைவரும், திருவேங்கடவனின் தூதுவர்களாக நின்று தங்கள் பணியை ஆற்றிக் கொண்டிருக்கின்றார்கள். மேலும், இப்புத்தாண்டில் திருவேங்கடவனின் மகிமை ஆப்பிரிக்கா, தென் கிழக்கு நாடுகளில் பரவுவதற்கு ஒரு வாய்ப்பும் ஏற்பட்டுள்ளது.

புதிய தெலுங்கு வருடப்பிறப்பு நாளன்று, ஹைதராபாத்தில் தொடங்கப்படும் உலகத்தெலுங்கு மாநாட்டிற்கும் தி. தி. தேவஸ்தானம் தன்பங்கை செவ்வனே செய்துள்ளது. காலத்தைப் பின்னோக்கிப்பார்க்கின் வடக்கையும் தெற்கையும் இணைக்கும் இத்தேசிய நெடுஞ்சாலைகளும், இரயில்களும் இல்லையெனின், தெலுங்கு நாடும், மக்களும் காலத்தால் மறைக்கப்பட்டிருப்பர் என்பது தெள்ளத்தெளிவு. அசோகனையும், சிவாஜியையும், அக்பரையும், கரிகாலனையும் சமுத்ரகுப்தனையும் இந்த உலகம் அறிந்திருக்கக் கூடும். ஆனால் நம்மில் எத்தனைபேர் — பாடலிபுத்திர வாயில்களைத் தன்னுடைய வலிமைமிக்க படையைக் கொண்டு தாக்கிய ஆந்திர அரசனை ஸ்ரீமுகாவையோ, சமுத்திர குப்தாவின் ஆதிக்கத்தைத் தடுத்து நிறுத்திய ஆந்திர அரசர்களைப் பற்றியோ, கன்னோஜ் அரசனை ஹர்ஷவர்த்தனின் ஊடுருவலைத் தடுத்து நிறுத்திய சாளுக்கியமன்னனை புலிகேசியையோ — அறிந்திருப்பர். இலக்கியத்

துறையில், ஜகன்னாத பண்டிதராஜர் இயற்றிய புகழ்பெற்ற ரஸகங்காதர நூலும், காளிதாஸனின் காவியங்களைப்பற்றி, கொண்ட வீட்டிரெட்டி பரம்பரையைச் சார்ந்த காட்டய வேமா எழுதிய விளக்கவுரைகளும் சிறப் புடன் திகழ்கின்றன. மஹாயான புத்தமதத்தின் ஸ்தாபகரான நாகார் ஜுனரும், ஒட்டுறுப்பு அறுவையைக் கண்டுப்பிடித்த மற்றோர் நாகார் ஜுனரும் ஆந்திர நாட்டைச் சார்ந்தவர்களே. காகதீய பாம்பரையைச் சார்ந்த கணபதி தேவாவின் தலைமைத் தளபதியான ஜகபநாயா, நிருத்திய சாஸ்திரத்தின் மீது இயற்றிய ஆய்வுக்கட்டுரையான நிருத்திய இரத்னு வளி இன்னும் ஒரு இலக்கியக் கருவூலமாகத் திகழ்கின்றது.

மேலும் ஆன்மிகக் கருவூலத்தின் மொத்த உருவமான, இப்புனித ஏழுமலைகளில் நின்ற வண்ணத்தில் அருள் புரியும் திருவேங்கடவன் திருக் கோயிலை நாம் அறிவோம். ஆனால் சிற்பக்கலைப்போன்று பலகலைகளுடன் ஆந்திர மாநிலத்தில் கலைக்கூடங்களாக விளங்குகின்ற மற்றையபுனிதத் தலங்களையும், நகரங்களையும் நம்மில் எத்தனைப் பேர் அறிந்திருக்கின்றனர் என்பது சிந்திக்க வேண்டிய ஒன்றாகும்.

பழமையின் பெருமையையும், முன்னோர்களின் சிறப்பினையும் இவ்வுலகிற்கு எடுத்துக்காட்ட, இவ்வுலகத் தெலுங்குமாநாடு ஒருமுயற்சி யாக அமைவதுமல்லாமல், கலாச்சார ஒருமைப்பாட்டிற்கு ஓர் உறு துணையாகவும் இது திகழும். மக்களின் தனித்தன்மையையும், நாட்டின் பழம்பெருமையினையும், பாதுகாத்து உயர்ந்தோங்கச் செய்தால்தான், நம்முன்னோர்களின் பெருமை மக்களிடையே நின்று நிலவும். இந்திய உப கண்டத்தின் ஓர் அங்கமாக நாம் திகழ்ந்தாலும், நமது பெருமை மிக்க பண்பாடு, எப்படி சங்கமத்துறையில் கங்கையும் யமுனையும் தெள்ளத் தெளிவாகத் தனித்துத் தெரிகின்றதோ அப்படியே தனித்தன்மையுடன் விளங்குதல் வேண்டும்.

பயன்மிக்க ஆன்மிகக் கருத்துக்கள் எங்கும் நன்முறையில் பேணிப் பாதுகாத்து பரவுவதற்கு, ஒரு வாய்ப்பாக இவ்ராக்ஷஸ வருடம் திகழ, அவ்வெல்லாம்வல்ல வேங்கடவன் அருள் புரிவாராகுக!



# செய்திச் சுருக்கம்

## ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமியின் பிரம்மோற்சவத் திருவிழா

தி. தி. தேவஸ்தான கோயில்களைப்பற்றிக் கூறப் புகுவோமாயின், ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் கோயிலுக்கு அடுத்து சிறப்புடன் விளங்குவது ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி கோயிலாகும். சிற்பக்கலைகள் மிக்கு விளங்கி, திருவேங்கடவன் கோயிலைக்காட்டிலும் மிகப் பெரியதான பரப்பளவும் கொண்டு, திருப்பதியிலுள்ள கோயில்களுள் குறிப்பிடுமவகையில் யாத்திரிகப் பெருமக்கள் பலரைக் கவரும் வணணம்திகழுவதுஇக்கோவிநதராஜர் கோயிலாகும். இக் கோவிந்தராஜரே, ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் பெரிய சகோதரர் என்று உள்ளூர்ப் புராணங்கள் செப்புகின்றன. ஆனல் இககோயிலை திருநிலைப்பாடு செய்த விசிஷ்டாத்துவைதத்தின் ஆசானுகிய இராமானுஜரால்தான் இக்கோயிலுக்குப் பேரும், புகழும் சேர்ந்தது.

இத்தகு பெருமைமிகு ஸ்ரீ கோவிந்தராஜரின் வருடாந்திர பிரம்மோற்சவத் திருவிழா 17—5—75 லிருந்து 25—5—75 வரை, 16—5—75 அன்று நடைபெறும் அங்குரார்ப்பணத்துடன், கொண்டாடப்படும். இந்நாட்களில் காலையிலும், இரவிலும் ஸ்ரீ கோவிந்தராஜப் பெருமாள், தன் பெண்துணைத் தெய்வங்களுடன், பல்வேறு வாகனங்களில் வீற்றிருந்து, நகரை திருஊர்வலம் வருவார்.

முக்கியமானதும், சிறப்பானதுமான இரதோற்சவத் திருவிழா 24—5—75 அன்று நடைபெறும. தி.தி. தேவஸ்தானம் அண்மையில் 3 இலட்சம் ரூபாய் செலவில், பெருமாளுக்கு ஒரு புதிய தேரினை செய்துள்ளது.

## திருமலையில் வசந்தோற்சவம்

திருவேங்கடவனின் வருடாந்திர வசந்தோற்சவத் திருவிழா 23—4—75 லிருந்து 25-4—75 வரை திருமலையில் நடைபெறும். சித்ராபௌர்ணமியுடன் தொடங்கும் இம மூன்று நாட்களிலும் துணைப்பெண் தெய்வங்களுடன் இறைவனின் உற்சவமூர்த்திகளின் திருஊர்வலம் கோயிலிருந்து வசந்தமண்டபம வரை நடைபெறும். இவ்வசந்தமணடபத்தில் உள்ள விலையுயர்ந்த வாசனைப் பொருள்களுடன் கூடிய புனிதநீரில்தான் இறைவனின் திருவிக்ரகங்களைப புனிதநீராட்டுவார்கள்.

இவ்விழாவின் முக்கிய நிகழ்ச்சி வெள்ளித்தேர் விழாவாகும். விழாவின் இரண்டாம் நாளன்று, இறைவன் தன் உற்சவமூர்த்திகளுடன், நன்ருக அலங்கரிக்கப்பட்ட இவ்வெள்ளித்தேரில் வீற்றிருந்து, நான்கு மாடவீதிகளில் திருஊர்வலம் வருவார் இதற்காகவே, தி.தி. தேவஸ்தானம் சுமார் ரூ. 6 இலட்சம் செலவில் இப்புதிய வெள்ளித்தேரை செய்வித்தது.

இவ்விழாவின் மூன்ருவது நாளில், ஸ்ரீ கிருஷ்ணசுவாமிக்கும், ஸ்ரீகோதண்டராம சுவாமிக்கும் அபிஷேகம் நடைபெறும்.

## ஸ்ரீ வேதநாராயணசுவாமியின் பிரம்மோற்சவத் திருவிழா

நாகலாபுரத்திலுள்ள ஸ்ரீ வேதநாராயண சுவாமி கோயில் மிகப்பழைமையும், வரலாறும் கொண்ட கோயில்கள் சிலவற்றுள் ஒன்ருகும். இவ்விடத்தில்தான் மஹாவிஷ்ணு ''சோமகாசுரா'' என்ற அரக்கனைக் கொன்று பிரம்மனுக்கு வேதங்களை மீட்டுத்

கொடுத்ததாக, புராணங்களும், உள்ளூர்க் கதைகளும் கூறுகின்றன. வலது கையில் திகிரிவட்டத்தை ஏந்திக்கொண்டு, அழகுடன் விளங்கும் இறைவனின் திருநிலை காணக்கிடைக்கா தோற்றமாகும்:

மேலும் விஜயநகரப் பேரரசன் ஸ்ரீ கிருஷ்ண தேவராயர் இக்கோயிலுக்கு பொருள் பலவற்றை வாரிவழங்கியதுமல்லாமல், தன் அன்னை ''நாகுளாம்பிகா'' வின் பெயரிலேயே ஒருநகரத்தையும நிறுவி, இக்கோயில் சிற்பக் கலைகள் பலவற்றுடன் திகழவும் செய்தான்,

ஒளி அலங்காரங்களுடன், கண்களைக் கவரும்வண்ணம் நடைபெறும், இக்கோயிலின் பிரம்மோற்சவத் திருவிழா, 24-4-75 அன்று நடைபெறும் அங்குரார்ப்பணத்துடன் 24-4-75 விருந்து 3-5-75 வரை கோயில் அரங்கத்தில் கொண்டாடப்படும். வைணவக் கோயில்களில் சிறப்பாகக் கருதப்படும் கருடவாஹன உற்சவமும், இரதோற்சவமும், 29-4-75 அன்று இரவும், 3-5-75 அன்று காலையும் முறையே நடைபெறும்.

வேதநாராயண சுவாமி வீற்றிருக்கும் இந் நாகலாபுரம், ஆரணியார் வழி செல்லும், சென்னை–திருப்பதி பாதையில் உள்ளது. திருமலையிலிருந்து நாகலாபுரத்திற்கு நேரடி பேருநது போககுவரத்து ஒன்றை தி. தி. தேவஸ்தானம் செயற்படுத்தி வருகின்றது. நாகலாபுரத்திற்குச் செல்லும் வழியிலேயே, ஆகாசமன்னனின் மகளான பத்மாவதி அம்மையாரை திருவேங்கடவன் திருமணம் செயதுகொண்ட நாராயணவனம் உள்ளது. கண்களுக்கு விருந்தளிக்கும் வகையில இயற்கைசூழலில் அமைந்த நீர்வீழ்ச்சிகளைக் கொண்ட கைலாசகோனையும், சிவன் கோயில் ஒன்றும் இவ்வழியில் உள்ளன.



### திருமலை - திருப்பதி தேவஸ்தான
# பொறுப்பாண்மைக்குழு முடிவுகள்

1975 ஆம் ஆண்டு, மார்ச் மாதம் 14, 15 ஆம்தேதிகளில் ஹைதராபாத்தில் நடைபெற்ற கூட்டத்தில், தி. தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக்குழு முடிவுசெய்த தீர்மானங்கள் பின் வருமாறு.

எம்.எஸ். எண், 8 நிதி திட்டத்தின்கீழ் அரசு விதித்துள்ள உத்திரவை தன்னுடைய ஊழியர்களுக்கும் 1–1–75 லிருந்து அமுலாக்க, தி.தி. தேவஸ்தானகுழு முடிவு செய்துள்ளது.

இவவுத்திரவினுல், மாதம் ரூ. 300 வரை அடிப்படை ஊதியம்பெறும் ஊழியர்கள், அவர்களுடையஅடிப்படை ஊதியத்தில்24% வீதம் கிராக்கிப்படியும், ரூ. 300 மேற்பட்டு ரூ. 2250 வரை அடிப்படை ஊதியம் பெறுபவர்கள், அவர்களுடைய அடிப்படை ஊதியத்தில் 18%வீதம் கிராக்கிப்படியும், அதாவது குறைந்தபட்சம் ரூ. 72 முதல், அதிகபட்சம் ரூ. 162 வரை பெறுவார்கள். மேலும் இவ்வுத்திரவினுல், இவ்வுதவித் தொகையில் 50% கட்டாயச் சேமிப்புத் திட்டத்தின்கீழ் பிடித்துக்கொள்ளப்படும்.

27–12–74 அன்று திறக்கப்பட்ட, தி.தி. தேவஸ்தானத்தாரின் அன்னமாசார்யா கலாமந்திரம், பொதுமக்கள் விழாவிற்காக நாள் ஒன்றுக்கு ரூ. 100/-வீதம் வாடகைக்கு விடப்படும். இக்கட்டிட பராமரிப்புக்கென காவற்பணிப் பொறுப்பாளர் (கடை நிலை எழுத்தர்) ஒருவரும் இரண்டு பணியாட்களும், துப்புரவாளர் ஒருவரும் அமர்த்தப் பட்டுள்ளனர்.

அரசு கல்லூரி ஆசிரியர்களுக்குக் கொடுப்பதுபோல் தேவஸ்தான ஆதரவு கல்லூரி ஆசிரியர்களுக்கும், எம். எஸ். எண். 8 (கல்வி) (ஸி) என்ற 28–9–74 தேதியிட்ட அரசு உத்திரவின்படி வீட்டு வாடகைப்படி அளிக்க மேற்படி குழு முடிவெடுத்துள்ளது.

திருப்பதி, கண் முகாமின் தற்காலிக மருத்துவ அலுவலரான டாக்டர். பி. இரங்கா ரெட்டி, எம்.பி.பி.எஸ்., அவர்களுக்கு ஒலிப் பெருக்கி தொகுதி ஒன்றை நன்கொடையாக அளித்த, தி.தி தே. செயலாட்சித் தலைவரின் செய்கையை குழு ஏகமனதாக வரவேற்றது. திருப்பதியிலுள்ள ஸ்ரீ கபிலேஸ்வரர் கோயிலின் முக மண்டபத்தை விரிவாக்க குழு ரூ. 95,000ஐ ஒதுக்கியுள்ளது. கபிலேஸ்வர் நகர் அருகில் 10படுக்கைகளைக் கொண்ட ஒரு மத்திய மருத்துவமனையை அமைக்க, ரூ. 4.95 இலட்சத்தை ஒதுக்க குழு தீர்மானித்துள்ளது.

தி.தி. தேவஸ்தான ஊழியர்கள் கூட்டுறவு வங்கியில், ஒரு குறிப்பிட்ட தொகையை முதலீடு செய்ய குழு முடிவு செய்துள்ளது. மேலும் அவ்வங்கியில் ஊழியர்களும் ஒரு குறிப்பிட்ட தொகையை முதலீடு செய்வதற்கு ஏற்ப, சில சட்டங்களைத் திருத்துவதற்கு சிபாரிசு செய்யும்வகையில், தீர்மானம் ஒன்றை குழு நிறைவேற்றியுள்ளது.

ஹைதராபாத், பாலாஜி பவன் அருகிலுள்ள காலிமனையில் கல்யாணமண்டபம் ஒன்றை அமைக்கவும் கடைகள் சிலவும், விருந்தினர் விடுதி ஒன்றினையும் கட்ட தி. தி. தே. குழு முடிவுசெய்துள்ளது.

இதுவரை இருந்துவந்த இலட்டுவிலை ரூ. 3 லிருந்து ரூ. 2-50க்கு குறைக்கப்பட்டுள்ளது.

திருமலையில் வரையறுக்கபபட்ட பாாவை யாளர்களுக்கு மட்டும் காணக்கூடிய தொலைக் காட்சி முறை ஒன்று நிறுவப்படும்.

கர்னாடகா மாநிலத்தில் சிருங்கேரியில் ரூ. 5 இலட்சம் செலவில சத்திரம் ஒன்று கட்டப்படும்.

தேவஸ்தான அறைகளில் மேற்கொண்டு சில வசதிகள்செய்துதரும்பொருட்டு, அறை களின் வாடகைக் கட்டணங்கள் நாள் ஒன்றுக்கு கீழ்வருவாறு மாற்றஞ்செய்யப் பட்டுள்ளன.

1. தி.தி. தேவஸ்தான விருந்தினர் விடுதி திருப்பதி, ரூ. 12/-
2. ஸ்ரீநிவாசா சத்திரம், ரூ. 10/-
3. ஸ்ரீ கோவிந்தராஜ சத்திரம், திருப்பதி. ரூ. 10/-

இக்கட்டணங்கள் 1–3–75 லிருந்து நடை முறையில் உள்ளன.

தேவஸ்தான வெளியீடுகள், உருவப் படங்கள் ஆகியவற்றின் விற்பனையைப் பெருக்க, வெளியீடுகளை மொத்தமாக வாங்கு பவர்களுக்குக் கீழ்வரும் சலுகைகள் வழங்க, குழு தீர்மானித்துள்ளது.

| வாங்கும் அளவு | தள்ளுபடி |
|---|---|
| 1. ரூ. 500/- அதற்கு மேலும் | 20% |
| 2. ரூ. 1000/-ம் அதற்கு மேலும் | 30% |
| 3. குறைந்தபட்சம் 100 பிரதிகளுக்கு மேல் வாங்கும் நாள்காட்டிகளுக்கு | 12½% |

மேலும் ரூ. 100/-க்கும் அதற்கு மேலும், வெளியீடுகளை வாங்குபவர்களின் சரக்கு சுமைக் கட்டணங்களை தி.தி. தேவஸ்தானமே ஏற்கும்.

புது தில்லி தி.தி. தேவஸ்தான தகவலறி விப்பு நிலையத்தின் மேலாளருக்குச் சிறப்பு ஊதியமாக மாதம் ஒன்றிற்கு ரூ. 100/-ஐ 1–1–74லிருநது வழங்குவதென குழு முடிவு செய்துள்ளது.

1952ஆம் ஆண்டு பழுது பார்க்கப்பட்ட வெள்ளித்தேரை விற்பதென்று, தி. தி. தே. குழு முடிவு செய்துள்ளது.

ரிஷிகேஷிலுள்ள ஆந்திர ஆஸ்ரமத்தை நிறுவிய சுவாமி சச்சிதானந்தா சரஸ்வதி அவர்களின் 5வது மறைந்த நாள் ஆண்டு விழாவை கொண்டாடுவதற்கென, ரூ. 3,500 ஒதுக்கப்பட்டுள்ளது.

அரசு ஊழியர்களுக்கு வழங்கப்படுவதைப் போலவே, தி.தி. தேவஸ்தான ஊழியர்களும் மோட்டார் காரோ அல்லது மோட்டார் சைக்கிளோ வாங்குவதற்கு அவர்களுக்கு முன்பணம் வழங்கும் வகையில், 2–2–67 தேதியிட்ட எம்.எஸ். எண். 23 என்ற அரசு உத்திரவை அமுலாக்க, குழு முடிவு செய் துள்ளது.

திருமலையில் பணிபுரியும் தி.தி. தேவஸ் தான ஊழியர்களுக்கு மூன்று ஆண்டுகளுக் கொருமுறை கம்பளி ஆடைகளை வழங்க, குழு தீர்மானித்துள்ளது.

1976ஆம் ஆண்டு முதல், மூன்றும் பிரிவு வரை உள்ள ஊழியர்களுக்கு, பஞ்சாங்கங் களுக்குப் பதிலாக, நாட்குறிப்பு புத்தகங்களை வழங்க குழு முடிவு செய்துள்ளது.

'லக்ஷ்மி கிராபிக்ஸ்' என்ற நிறுவனத்தார் மூலம் அச்சடிக்கப்பட்ட 'திருப்பதி வழி காட்டி' என்ற மடிப்பு தகவல் அட்டைகள் பிரதி ஒன்று ரூ. 1 வீதம் விற்பனைக்கு வந் துள்ளன.

திருமலையில் வழங்கப்படுவதைப் போலவே, திருப்பதியில் பணிபுரியும் தேவஸ்தான ஊழியர்களுக்கும் சலுகை உணவு வழங்க, குழு முடிவு செய்துள்ளது.

எவ்விதமான பணியும் புரிவதற்குத் தகுதியில்லாதவர்களாகிய 'ஏழை விடுதி' யைச் சார்நத தொழுநோய்காரர்களுக்கு உணவும், உடையும் தி, தி.தே. இலவசமாக அளிக்கும்.

ஸ்ரீ கபிலேஸ்வர சுவாமிக்கும், ஸ்ரீகாமாட்சிதேவிக்கும் தங்கமுலாம் பூசிய செம்பு கலசத்திற்காகவும், நாகாபரணத்திற்காகவும் ரூ 37,943 ஒதுக்கப்பட்டுள்ளது.

ஊடுகதிர்க் கதிரியக்க மருத்துவ முறையினை செயற்படுத்தவும், புற்றுநோய் குணப்படுத்துவதற்கென துறை ஒன்றினை திருவேங்கடவன் ரூயா மருத்துவ மனையில் திறக்கவும், ரூ. 2,50,000 ஒதுக்கப்பட்டுள்ளது.

யாத்திரிகர்களின் வசதிக்காக திருமலையில் மத்தியச் 'சிற்றுண்டிச்சாலை' ஒன்றை நிறுவ ரூ 21.2 இலட்சம் ஒதுக்கப்பட்டுள்ளது.

சிற்பங்கள் போன்றவற்றை பாதுகாக்க வேண்டியதின் பொருட்டு, வேண்டிய வழிவகைகளை ஏற்பாடு செய்வதின் பொருட்டு, ஹைதராபாத்தைச் சார்ந்த, ஓய்வுப்பெற்ற தலைமைத் தொல்பொருள் ஆராய்ச்சியாளரான திரு. பி. பி. லால் அவர்களை அழைக்க குழு முடிவுசெய்துள்ளது.

உடல் ஊனமுற்றோர் வாழ்கைக்காக ஏற்படுத்தப்படும் 'மறுசீரமைப்பு' நிலையத்திற்காக ஏற்படும் செலவில், நான்கில் மூன்று பங்கினை மத்திய அரசும், மாநில அரசும் ஏற்பதாக இருந்தால், மீதி நான்கில் ஒரு பங்கை தான் ஏற்பதாக தி. தி. தே. குழு ஒப்புதல் அளித்துள்ளது.

அஹோபிலத்திலுள்ள, தி. தி. தேவஸ்தான சத்திரத்திலுள்ள வசதி அறைகளுக்கும், இலவச அறைகளுக்கும் முறையே ரூ. 3/-ம், ரூ. 0.50/-ம் பராமரிப்புக்கட்டணமாக நிர்ணயிக்கப்பட்டுள்ளன.

திருமலையின் வைகானஸ ஆஷ்ரமத்தின் ஆகமசார்யாவான, ஓய்வுபெற்ற ஸ்ரீமான். ஆர். பார்த்தசாரதி பட்டாச்சார்யா அவர்கள் தி.தி. தேவஸ்தானத்தின் ஆஸ்தான ஆகமசார்யாவாக நியமனம் செய்யப்பட்டுள்ளார். அவருக்கு வாடகையில்லா தங்கும் வசதி அளிக்கப்படும்.

ஸ்ரீ வேங்கடேஸ்வரர், ஸ்ரீ பத்மாவதி அம்மையார் உருவப்படங்களை அச்சடிப்பதின்றி, மேலும், தி.தி.தே. கண்காணிப்பில் உள்ள மற்றைய கோயில்களின் முக்கிய தெய்வங்களின் உருவப்படங்களை அச்சடிக்கவும், வெள்ளியம் பூசிய தகடுகளில் ஸ்ரீ வேங்கடேஸ்வரர், ஸ்ரீ பத்மாவதி அம்மையார் உருவப்படங்களை அச்சடிக்கவும் குழு ஒப்புதல் அளித்துள்ளது

திருப்பதியில் பயன்படுத்துவதற்காக, நோயாளி வண்டி ஒன்றை வாங்குவதற்கு ரூ. 85,000 ஒதுக்கப்பட்டுள்ளது.

தன்னிடம் இருக்கும் 31 வண்டிகளை ஏலத்தின் மூலம் விற்று, புதிதாக 4 வண்டிகளை வாங்க குழு முடிவெடுத்துள்ளது.

தி.தி. தேவஸ்தான ஊர்திகளை ஓட்டும் போது, தற்செயலாக ஏற்படும் விபத்துகளுக்கு உடனடி மருத்துவ உதவிக்கு, தி.தி. தேவஸ்தான போக்குவரத்து துறையினர்க்கென மருத்துவ அலுவலர் பதவி ஒன்று ஏற்படுத்தப்பட்டுள்ளது.

12-4-75 அன்று தொடங்கும் உலக தெலுங்கு மாநாட்டிற்கு ரூ. 1,00,000/- தி.தி.தே. சார்பில் நன்கொடையாக அளிக்கப்பட்டுள்ளது.

திருவேங்கடவன் ஏழை தொழுநோய் விடுதிற்கு, டாக்டர். ஜான் நாராயண அவர்கள் தற்காலிக மருத்துவ அலுவலராக நியமிக்கப்பட்டுள்ளார்.



# திருத்துழாய் ப்ரபாவம்

முருகனடி - எஸ். ஜெயராமன்,
சேலம் டவுன்.

முன்னுரை : கலியுகத்திலே காமக்குரோதாதிகள் மேலிடும் காலம். அதர்மம் தலைவிரித்தாடும் காலம். ஐஸ்வர்யங்குறையும் காலம். அப்படிப்பட்ட சமயத்தில் கிருபையோடு கூடி அநுக்ரஹிக்கப்பட மஹாத்மியங்களை வாஸிப்பது விசேஷம். புருஷார்த்தங்களைத் தரும் என்பது ஆச்சார்யார்கள் சொன்ன விஷயம். மேற்படி ப்ரபாவம் மஹரிஷிகளாலும் ஒத்துக்கொள்ளப்பட்டதாகும். அதன் வ்யாக்யானமான தர்மங்களை இங்குச் சிறிது நாமும் உணர்ந்து, அருள்பெற முயற்சிப்போமாக. உத்தம பதவியை அடைய அதைக் காட்டிலும் மேலான மார்க்கமில்லை என்பதாம். அதை சுருக்கமாய்ச் சொல்லி சர்வாபீஷ்டங்களும் நம்மை வந்தடையும்படிக்கு, துளஸி புராணமாக இங்கே உங்கள் முன் வைக்கிறேன். இவ்வியாஸத்தை எல்லோரும் பாராயணஞ் செய்து சிரேயஸ்ஸை அடையக் கடவது. தேவேந்திரன் வேண்டிக்கொண்டதற்கிணங்க ப்ரஹஸ்பதியால் இது விஷயம் சொல்லப்பட்டதாக ஸூதபுராணிகர் ஸநகாதிகளுக்குச் சொல்லியபடியாம். ஹிரண்யகசிபு புத்திரன் பிரஹ்லாதன் நரகாசுரனுக்குச் சொன்னது.

தேவியின் வாஸம்: மோக்ஷமார்க்கத்திற்கு வழிகாட்டக்கூடிய மகத்வமுடையது இத்துளஸிதேவியின் சரித்ரம். பரமபக்தியோடு கூடி எவன் ஒருவன் துளஸியை தன் வீட்டில் வைத்து, வளர்த்து, பூஜிக்கிறானோ அவர்கள் கிரஹத்தில் மஹாலக்ஷ்மி நித்யமாக வஸிப்பாளாம். சந்த்ர நட்க்ஷத்ரங்கள் உள்ளவரையில் சர்வசம்பத்தும் பெற்று சிறப்புடன் வாழ்வார்கள். இது கதையல்ல. கண் கூடாகப்பார்க்கலாம். ப்ரத்யட்க்ஷ அனுபவம் பெறலாம்.

துளஸி விசேஷம்; லக்ஷ்மி-நாராயணனுக்கு ப்ரீதியானது. பூஜைக்கேற்ப ஏற்றமுடையது. பால், பழம், பன்னீரோடுகூடி, புஷ்பங்களாலே பூஜிப்பதைக்காட்டிலும் இத்துளஸி தளம் சிரேஷ்டமுடையது. விசேஷத்தன்மையுடையது. சகலபாபங்களையும் போக்க வல்லது.

துளஸி தீர்த்தபானம் செய்தவர்களது துன்பம், பாம்பு பழைய தோலிலேயிருந்து விடுபட்டாற்போல நீங்கும். துளஸியினுடைய வேர், பல நோய்களுக்குக் கைகண்ட மருந்தாம். துளஸி, சிரார்த்தக்காலத்தில் மிக முக்கியமாக மதிக்கப்படுகிறது.

ஹரிக்குகந்த துளஸி எல்லார் மனதிலும், ப்ரீதிபண்ணும். துளஸி தள அர்ச்சனை அஷ்ட லக்ஷ்மியையும் வசமாக்கும் என்பதை துளஸீ புராணம் விவரிக்கிறது. இம் மஹாத்மியம் மஹிமையுடையது என்பதை அதன் மஹிமையில் நம்பிக்கைக்கொண்டோர் அறிவர்.

பூஜா ப்ரபாவம்: நித்தியபடிக்கு துளஸி பூஜை செய்யத்தக்கத்தொன்று. கோலமிட்டு தீபதூபங்காட்டி இத்தேவியை திருப்திபடுத்துபவர்கள் என்றும் சமூகத்தில் ஸோபித்து விளங்குவார்கள். ஐப்பசியில் ஆரம்பித்து 1 வருஷம் துளஸி பூஜையை செய்வது விசேஷப் பலனைத்தரும் என்று துளஸி மஹாத்மியம் சொல்லுகிறது,

பூஜாக்கிரமம்: ஒரு மங்களமான நாளில் ஐப்பசி சுக்லபட்க்ஷ துவாதிசியில் விதிப்படி

இப்பூஜை ஏற்கவேண்டும். சதுர்புஜங்களோடு கூடிய துளஸிதேவியின் திருவுருவத்தை சித்திரத்தில் எழுதி, 16 கலசந்தாபித்து, தக்க ஆச்சார்யர்களைக் கொண்டு, குருதட்க்ஷிணை முதலான சம்பாவனை புரிந்து குறைந்தது இந்தப்படிக்கு, 12 நாளாகிலும் செய்துவர, ஒருகுறையுமில்லாது அக்கிரஹத்தில் ஐஸ்வர்யதேவி குடியிருந்து நினைத்ததை முடித்துவைப்பாளாம்.

ஒருவன் தன்னுடைய தோட்டத்தில் வைத்து வளர்த்த துளஸியை எடுத்து பூஜை செய்வது உத்தமம். காட்டுத் துளஸி மத்யமம். மற்றது அதமம். கோயிலிலோ, ப்ருந்தாவனத்திலோ உள்ள துளஸியைப் பறித்தால் பாபம் வந்துசேரும். செய்த புண்ணியமும் போய்விடும் என்பது ஐதீகம்.

ப்ரஹ்மஹத்தி முதலான தோஷங்கள் நீங்கும்படிக்கு இப்பூஜை ஏற்பவர்கள் பின்னால், லக்ஷ்மி நாராயணன், பசுவோடு கன்று போவதுபோல போவான் என்பது சத்தியம். 1 வருஷம் வரையில் விடாது இப்பூஜையை செய்து முடிப்பவர்கள், எண்ணிய பயனும் புண்ணிய பலனும் பெறுவார்கள்.

விசேஷ காலங்கள்: மாதப்ரவேசம், புண்ய தினங்கள், அமாவாசை, கிரஹணகாலம், சிரார்த்தக்காலம். ஸ்ரீஜயந்தி, ஸ்ரீராமநவமி, துவாதசி, ஹரிதிவஸம், மஹாநவமி ஆகியவை இதர விரதக்காலங்கள்.

தேவியின் மற்றையநாமங்கள்: துளஸி, ஸ்ரீமஹாலக்ஷ்மி, லக்ஷ்மி வித்யாயசஸ்வனி, தர்மியா, தர்மமயீ, தேவி, தேவதேவ மனப்ரியீ, லக்ஷ்மிப்ரஸகீ, ஸுப்ரு, பூ, பூமி, அசலா, அமலா முதலானவையாம். இத்தேவியின் நாமங்கள் பாராயணம் மற்றும் ஜபத்திற்கு உரியது. சடாட்க்ஷரம், அஷ்டாட்க்ஷரம், பஞ்சாட்க்ஷரம் மந்த்ரங்களுக்குச் சமமானது.

அருள்பெற்ற அடியார்கள்:

1. பார்வதிதேவி துளஸி பூஜாபலத்தால் பரமேஸ்வரனுடைய உடம்பில் பாதியைப் பெற்றாளாம்.
2. துர்க்கை ராக்ஷச சம்ஹாரஞ் செய்து முடித்தாளாம்.
3. சுக்ராச்சாரியார் வித்யாபலம் பெற்றாராம்.
4. ஹனுமான் துளஸி மஹிமையால் சமுத்ரத்தைத் தாண்டினராம்.
5. ஸ்ரீராமனின் இராவண சம்ஹாரத்துக்கு இத்துளஸிதேவியே அருள்பாலித்தாளாம்.
6. முழுமுதற் கடவுளாலும் போற்றப்பட்டதாகையினாலே கஜமுகாசுரன் வதம் நடந்தது.
7. திரிபுர சம்ஹாரக்காலத்தில் பரமேஸ்வரனே களைத்துப்போய் இத்தேவியை பூஜித்தார்.
8. ஸாவித்ரி பதிவ்ருதா தர்மம் நிலைநாட்டின வரலாறு சரித்ரப்பிரசித்திப் பெற்றது.
9. ரம்பை முதலான தேவஸ்திரீகளும் இத்துளஸிதேவியை விசேஷமாய் பூஜித்து தேவேந்திரனைப் பதியாக அடைந்தார்கள்.
10. புண்டரீகன் துளஸிதேவி சங்கீர்த்தனஞ் செய்து புண்ணியம் மிகப் பெற்றான் என்று கூறப்படுகிறது.

புண்ணியப் பயன்கள்: யார் ஒருவர் அன்போடு இந்த துளஸி புராணத்தைக் கேட்கிறார்களோ அவர்களிடத்திலே யமன் வரமாட்டானும். மோட்க்ஷத்தை அடைவர். மேலானபதவி அடைந்து சுகபோகாதிகளை அனுபவிக்கலாம் என்பது பிரஹ்லாத ஆழ்வான் வாக்கு.

பாபிகளும் பயன்பெறும் பௌண்ட்ரகனுடைய சரித்திரச்சுருக்கம்;

முன்னொரு காலத்தில் பௌண்ட்ரகன் என்கிற வேடன ஒருவன் இருந்தான். அவன் தினந்தோறும், மிருகங்களையும், ப்ராம்மணர்களையும், பசுக்களையும், பட்க்ஷிகளையும் கொன்று, சண்டாளஸ்திரீகளை மணம்செய்து கொண்டும் காலம்கழித்துவந்தான். இப்படிப பட்ட துஷ்டதுவேசக் காரணங்களால், நாடு மழையில்லாமல், காடு எரிந்து காலக்கிரமத்தில் ஜனங்களே இல்லாமற்படிக்கு போய் விட்டார்கள். ஒருநாள்வழக்கம்போல் திரிந்த வேடன், பசியின்தாபத்தால் தன் குடும்பத்தையே நாசஞ்செய்து எல்லாரையும் சாப்பிட்டுவிட்டான். இப்படியிருக்கும் நாளிலே ஒரு நாள் வேட்டைக்காகப் புறப்பட்டவன், வெளியில் திரிந்தவாறே இருநதான். தீனிக்காக அலைந்தான். அப்பொழுது ஒரு மலைக் குகையிலேயிருந்து சிங்கமொன்று வந்தது. அதனைப் பார்த்தவன் உடனே பாணப்ரயோகம் செய்தான். சிங்கம் சீறிட்டது. மஹா கோபங்கொண்டது. இவனைவிட மிக்கப்பசி உடையதாயிருந்தது ஆகையால் க்ஷண நேரத்தில் இவனைக் கொன்றது. இவன் கீழே விழுந்ததும், துளஸிக்காட்டிலிருந்து, காற்று வீசியது. அது இவன்மெல் பட்டமாத்திரத்தில் பரமபதம் பெற்ருன் இது முன்ஜென்ம புண்யவாசமே என்ருகிறது. துளஸிதளக்காட்டிலிருந்து வரும் காற்றுக்கே இந்த பெருமை என்ருல் அதனுலேயே பாவங்கள் ஒழிந்து போகின்றன என்ருல் தேவியின் ப்ரபாவம் சொல்லிற் அடக்க முடியாது.

துளஸிதேவியை நாம் பூஜை செய்யவில்லையானுல் நமக்கும் விருட்க்ஷங்களுக்கும் வேறுபாடே கிடையாது. இந்தப்படிக்கு பௌண்ட்ரகனுடைய சரித்ரம் பிரஹ்லாதனுல் சொல்லி பூர்த்தியாகப்பெற்றது.

முடிவுரை ;

துளஸி மந்திரம்

'' துளஸ் யம்ருதஸம்பூதே ஸதாத்வம் கேசவப்ரியே,
ஹரேராத நார்த்தாய லுநாமித்வம் ப்ரஸீதயே,
மோனக்ஷக ஹெதொதரணி ப்ரஸூதே, விஷ்ணுஸ்
ஸமஸ்தஸ்ய குரோ: ப்ரியேதே, ஆராத நார்த்தம்
புருஷோத்த மஸ்யலுநாமி பத்ரம் துளஸிக்ஷமஸ்வ ''
'' ஸ்ரீமத்துளஸியம்மா திருவே கல்யாணியம்மா
வெள்ளிக் கிழமைதன்னில் விளங்குகின்ற மாதாவே ''

என்ற ஸ்தோத்ரங்களையெல்லாம் கிரஹஸ்தர்கள் பூஜை செய்தால் கீர்த்தியுடன் வாழ்வார்கள்; பாரினில் மேன்மைகள் பலபெற்று அற்புதமாய் வாழ்ந்திடுவர். பக்திபூர்வமான முறையில் இதைச் செய்யவேண்டுமென விதிக்கப்பட்டுள்ளது.

தெய்வப்பண்புகள் நம்மிடத்லே தானுக வந்து சேருவதில்லை. அதற்கு நாம் முயற்சி செய்யவேண்டும். இதைக்கண்டுகொண்டால் கவலை தீரும். நன்னெறி சேரும். அதனுல் இத்துளஸி மஹாத்மியந்தனை உச்சாரணஞ் செய்து, சமூகத்தில் மேன்மையோடு இருந்து, நலம் பெறுவோமாக.

*

# ஸ்ரீ நாராயணீயம்

முன்னுரை: கேரள நாட்டில் திருச்சூரி லிருந்து சுமார் 20 மைல் தூரத்தில் குருவா யூர் உள்ளது. அங்கு விளங்கும் தெய்வம் ஸ்ரீ குருவாயூரப்பன். பல ஆண்டுகட்கு முன்பு, வாயுபபிடிப்பால் வருந்திய ஸ்ரீ நாராயண பட்டத்ரி என்பவர் ஒரு சோ திடரை அணுகித் தனது நோய்க்கு ஏதாவது பரிகாரம் சொல்லுமாறு கேட்டார். அதற்கு அந்த சோதிடர், பட்டத்ரியை குருவா யூருக்குச் சென்று அங்கு ஸ்ரீ குருவாயூரப்பன் முன்னிலையில் மீனை நாவில் வைத்துக் கொண்டிருக்கும்படிச் சொன்னார். பட்ட த்ரியோ சிறந்த பிராமணர். (நம்பூத்ரி) வேறு ஒருவராய் இருந்தால் மீனை நாக்கில் படும்படி வைத்துக் கொண்டு குருவா யூரப்பன் முன்னிலையில் உட்காருவது ஒரு மருத்துவ சிகிச்சைபோலும் என்று எண்ணி யிருப்பார். ஆனால் பட்டத்ரியோ சிறந்த பக்தராதலால், அதன் உண்மைப் பொருளைப் புரிந்து கொண்டுவிட்டார். உடனே குரு வாயூருக்குச் சென்று அங்குள்ள குளத்தில் நீராடி, குருவாயூரப்பன் முன்னிலையில் போய் நின்றுகொண்டு, அவர் மீன் அவதாரம் (மச்சாவதாரம்) செய்த சிறப்பைத் தோத் திரம் செய்யலானார். மீன் அவதாரத்தைத் தோத்திரம் செய்யும்போது மீன் நாக்கில் தானே இருக்கும்! இவ்வாறே ஸ்ரீ குருவா யூரப்பனின் எல்லா அவதாரங்களையும் அவர் முன்னிலையிலேயே தோத்திரம் செய்ய, அவரது வாயுப் பிடிப்பும் பிறவிப்பிணியும் நீங்கிற்று. அத்தோத்திர நூலே ஸ்ரீ நாரா யணீயம். இது வடமொழியில் உள்ளது.

## முதல் தசகம்

நிறைந்த ஆனந்தத்தையும் அறிவையும் உருவமாக உடையதும், உண்மையானதும், உவமையற்றதும், காலம், இடம் இவற்றின் எல்லைக்கு அப்பாற்பட்டதும், இலட்சக்கணக் கான உபநிடதங்களால் நேரே காண்பிக்க முடியாமலிருப்பதும், மாயையினின் றும் விடுபட்ட மோட்சத்தின் உருவமா யுள்ளதுமான பரம்பொருளே குருவாயூர் கோயிலில் மக்களின் பாக்கியமாகத் திகழ் கிறது.

இவ்வாறு அடையமுடியாத பொருள் எளிதாகக் கைக்குக்கிட்டியும், உடம்பாலும், வாக்காலும் மனத்தாலும் மக்கள் மற்றொரு கடவுளை வணங்குவது அறியாமையால்தான் என்பது நிச்சயம். அந்தோ! ஆனால், நாங்கள் உலகத்துன்பங்களைத் துடைக்க, உறுதியான மனதினால், எல்லா இடத்தும் விளங்கும் குருவாயூரப்பனையே அண்டி யிருக் கிறோம்.

தங்களுடைய உடம்பு, இரசோகுணம், தமோகுணம், ஆகியவற்றின் கலப்பற்ற தூய் மையான சத்துவகுணத்தாலும், ஐம்பூதங் களாலும், பதினொரு அவயங்களாலும் ஆக்கப்பட்டதென வியாசமுனிவர் பல இடங் களில் கூறியுள்ளார். அவ்வுடம்பு மிகத் தூய்மையாக இருப்பதாலே, உள்ளே இருக் கும் பரமானந்த உருவமான பரம்பொருள் மறைக்கப்படாமல் ஒளி மிக்கு விளங்குகிறது. காதிற்கும் மனதிற்கும் இனியதும், எளிதில் புரிந்துகொள்ளக் கூடியதுமான அவ்வுருவத் தில் புண்ணியசாலிகள் திளைக்கிறார்கள்.

தாங்கள் மாறுதலற்றவர், எப்போதும் நிறைந்தவர்; எல்லையற்ற ஆனந்தத்தை நல்கும் அமுத உருவானவர்; தம்மை வந் தடைந்த முத்தர்களின் கூட்டத்தால் விளங் குபவர். இத்தகைய தூய பரம்பொருளாகிய

கடலில் விளங்கும் தூய்மையான சத்துவ குணத்தை அலைகளுக்கு ஒப்பாகக் கூறுகின்றனர். ஆகவே தாங்கள் பாகுபாடற்றவர் என்பதில் ஐயயமில்லை; தங்களைப் பாகுபாடுடையவராகக் கூறுதல் தங்களின் பகுதி அவதாரங்களைப் பொருத்தமட்டே; தாங்கள் முற்றிலும் நிறைந்தவர்.

ஓ பிறப்பற்றவரே! ஒருவிதச் செயலுமில்லாதவராயினும், காரணமின்றி, மாயையை ஏவுவதான செயலைச் செய்து வருகிறீர். அதனால், தங்களிடம் மறைந்திருந்ததும் இல்லாததற்கு ஒபபானதுமான மாயை, கற்பத்தின் ஆரம்பகாலத்தில் தோன்றுகிறது. சுயப்பெருமையின் பெருக்கால் குன்றாத அறிவை உடையவரே! வைகுண்டத்தில் வசிப்பவரே! அப்படிப்பட்ட பெருமையுடைய தாங்கள், மிகத் தூய்மையானதும், ஒன்றையும் மறைக்காததும் சத்துவ உருவமானதுமான மாயையின் விவரிக்க முடியாத ஒரு பகுதியைத் தாங்கிய உருவம் தரிக்கிறீர்.

ஓ குருவாயூரப்பா! நீருண்ட மேகம் போன்றதும் ''கலாயா'' பூப்போல் மகிழ்ச்சியைக் கொடுப்பதும், அழகிற்கு ஒரே இடமாயுள்ளதும், புண்ணியம் செய்தவர்களின் கண்களுக்கு முழுப்புண்யத்தின் அவதாரம் போன்றதும், இலக்குமியின் தடங்கலற்ற விளையாடுமிடமாகவுள்ளதும், தன்னை ஆழ்ந்து சிந்திப்போரின் இதயத்தில் அமுதப் பெருக்கைக் கொட்டுவதுமான உங்களது உடம்பை எப்போதும் ஆழ்ந்து நினைக்கிறேன்.

யாவராலும் வெற்றி காணமுடியாதவரே! சீவனுக்குப் பலவகையான துன்பங்களை அளிப்பதான தங்கள் படைப்புத் தொழில் மிகக் கொடுமையானதென்று முன்னால் என்னால் நினைக்கப்பட்டது. இப்போது அவ்வாறு எண்ணவில்லை. ஏனெனில், தாங்கள் படைப்புத் தொழிலைச் செய்யாவிடின், சீவன்கள் அறிவாகிய ஊற்றில் தோய்ந்திருப்பதும், மிகவும் எழில் கொஞ்சுவதுமான தங்கள் உடம்பைக் கண்களாலும் காதுகளாலும் பருகிப் பேரானந்தமாகிற அமுதக் கடலின் பெருக்கில் எவ்வாறு பெருமகிழ்ச்சி அடைவர்?

ஹரியே! தாங்கள் தங்களை வணங்குவோரின் முன்னிலையில் எப்போதும் தோன்றுகிறீர். அவர்களால் விரும்பப்படாவிடினும், பல இன்பங்களையும், செல்வத்தையும் பேரானந்தமயமான வீட்டுப்பேற்றினையும் எப்போதும், நல்குகிறீர். ஆகவே, தாங்கள் எல்லோராலும் அடையக்கூடியதும், எல்லாப் பலன்களையும் கொடுக்கக்கூடியதுமான பாரிசாதமரத்தைப்போல் விளங்குகிறீர். ஆனால் இந்த இரவலர்களின் கூட்டம், இந்திரன் தோட்டத்திலுள்ள அப் பாரிசாத மரத்தை வீணுக்க விரும்புகிறது.

எல்லையற்ற குணக்குவியல்களுக்கு இருப்பிடமானவரே! சௌரியே! மற்ற தெய்வங்கள், கருணையினால், மற்றப் பொருட்களை (ஆன்மாவைத்தவிர) கொடுக்கின்றன. தாங்கள் பெருங்கருணையினால் உங்கள் ஆன்மாவையே கொடுப்பவர் மற்ற தெய்வங்கள் தம்முடைய சக்தியினால் உலக மக்களுக்கு அருளையும் தண்டனையையும் அளிக்கின்றனர். தாங்களோ தங்கள் ஆன்மாவிற்கும் அருளும் தண்டனையும் அளிக்க வல்லவர். பெரும் பாக்கியம் செய்த மக்கள், தங்கள் அருகில் வரவர மிக்க இன்பத்தை அடைந்து தங்களிடத்தில் பேரானந்தத்தை எய்துகிறார்கள்.

ஏ குருவாயூரப்பா! முரனைக் கொன்றவரே! தங்களது கடவுட்டன்மை சங்கரர் முதலிய தெய்வங்களை ஏவும் ஆற்றலுடையது. தங்கள் சக்தி, எல்லோருடைய ஒளியையும் பறிக்கிறவர்களுடைய ஒளியையும் பறிக்கக்கூடியது. தங்களது மாசற்ற புகழும் ஆசையை முற்றும் துறந்தவர்களாலும் பாடப்பட்டிருக்கிறது. இலக்குமி எப்போதும் தங்கள் உடம்பிலேயே சேர்ந்திருக்கிறாள். தாங்கள் எல்லாம் அறிந்தவர். எப்பொருளிலும் பற்றற்றவர். ஆகவே ''பகவான்'' (கடவுள்) என்ற சொல்லுக்கு முக்கியப் பொருளாக இருக்கிறீர்.

# சேவைக்கு ஒரு வாய்ப்பு

* * *

அன்புள்ள நண்பரே! வாசகரே!

திருமலை - திருப்பதி தேவஸ்தானத்தார், இந்து சமயக் கொள்கைளை பரப்பவே இப்பத்திரிகையை நடத்தி வருகின்றார்கள் என்பதும் எந்தவித இலாப நோக்கத்துடன் இப்பத்திரிகையை நடத்தவில்லை என்பதும் உங்களுக்குத் தெரியும். மற்றைய தனது துறைகளை விரிவுபடுத்தும அதே நேரத்தில், தி.தி. தேவஸ்தானம், மேம்பட்ட பல வல்லுநர்களின் ஆன்மீக, தத்துவ அறிவார்ந்த கருத்துக்களையும் பரப்பி வருகின்றது.

ஆகவே பத்திரிகையின் விற்பனையை இரட்டிப்பாக்க, நீங்கள் ஒவ்வொரு வரும் குறைந்த பட்சம் ஒரு நபரையாவது சந்தாதாரராக பதிவு செய்தால்தான், பத்திரிகையின் உயர்ந்த நோக்கம் வெற்றியடையும்.

இந்த கூப்பனையே நீங்கள் அனுப்ப வேண்டுமென்பதில்லை. ஆனால் அதில் கேட்டுள்ள தகவல்களை மட்டும் ஒரு காகிதத்தில் எழுதி தெரிவித்தால் போதும்.

ஏன் நீங்கள், இதனையே ஓர் ''ஆன்மீக ஒளி'' பரிசாக, உங்களுடைய உற்றார், உறவினர், நண்பர்களுக்கு அனுப்பக் கூடாது?

## உத்தரவுச் சீட்டு

ஆசிரியர்க்கு,

கீழ்வரும் நபர்களை ஸப்தகிரி வாசகர்களாக அதாவது புதிய சந்தாதாரர் களாக பதிவாக்க விரும்புகின்றேன். ஆகவே தயவு செய்து அவர்களுக்குத் தவறாமல் பத்திரிகைகளை அனுப்பி வைக்கவும். இது, நான் அவர்களுக்குத் தரும் ஒரு பரிசு:

| | பெயர் | முழு முகவரி | செலுத்திய பணம் | அனுப்ப வேண்டிய மொழி |
|---|---|---|---|---|
| 1. | | | | |
| 2. | | | | |
| 3. | | | | |

நான் இத்துடன்............ஆண்டு சந்தா ரூ.... . மணியார்டர் மூலம் அனுப்பியுள்ளேன்.

**கவனிக்கவும் :-**

ஸப்தகிரி பத்திரிகையின் ஓராண்டுச் சந்தாத்தொகை ரூ. 6/-. 'ஸப்தகிரி' ஐந்து மொழிகளில் அதாவது ஆங்கிலம், தமிழ், தெலுங்கு, இந்தி, கன்னடம் ஆகிய மொழிகளில் வெளி வருகின்றது.

உங்களால் முடிந்தவரை பலரை சந்தாதாரராக்குங்கள்!



# ஓர் நற்செய்தி

திருமலை - திருப்பதி தேவஸ்தான மாத வெளியீட்டில் பிரசுரிப்பதற்கு, ஹிந்துசமய சம்பந்த கோயில்கள், வியாபாரம் மற்றும் வேறு ஸ்தாபனங்களிலிருந்தும் கீழ்க்கண்ட கட்டணத் தொகைப்படி விளம்பரங்கள் ஏற்றுக்கொள்ளப்படும்.

## கட்டணத் தொகை ஒவ்வொரு தொகுப்பிற்கும்

**உறையின பின பக்கம்:**

| | |
|---|---|
| ஒரு வர்ணம் | ரூ. 200/- |
| இரண்டு வர்ணங்கள் | ரூ. 250/- |
| மூன்று வர்ணங்கள் | ரூ. 300/- |

**உறையின் உட்பக்கங்கள் (முன் அல்லது பின்):**

| | |
|---|---|
| ஒரு வர்ணம் | ரூ. 150/- |
| இரண்டு வர்ணங்கள் | ரூ. 200/- |
| மூன்று வர்ணங்கள் | ரூ. 250/- |

**சிறந்த இடங்கள் (முகப்பார்வை):**

| | |
|---|---|
| முன் பக்கம் | ரூ. 125/- |
| கடைசி பக்கம் | ரூ. 110/- |
| செய்திக்கு எதிரில்; | |
| முழுப் பக்கம் | ரூ. 100/- |
| அரை பக்கம் | ரூ. 60/- |

**சாதாரண விளம்பரம்:**

| | |
|---|---|
| முழுப் பக்கம் | ரூ. 80/- |
| அரைப் பக்கம் | ரூ. 50/- |
| கால் பக்கம் | ரூ. 30/- |

**அச்சுக் குறிப்பு:**

| | |
|---|---|
| ஸ்கீரின் உறை பக்கம் | 80 to 100 |
| ஸ்கீரின் உள் பக்கம் | 65 to 80 |

பிளாக்குகள்;

| | |
|---|---|
| முழுப் பக்கம் | 6" × 8" |
| அரைப் பக்கம் | 6" × 4" or 3" × 8" |
| கால் பக்கம் | 6" × 2" or 3" × 4" |

## வெளியீடு விஷயங்கள், பிளாக்குகள் அனுப்பும் குறிப்பு

1. விளம்பரத்திற்கு அனுப்பும் நபர்கள் உறை ஏடுகள் தவிர, மற்றவைகளுக்கு 6 மாத வெளியீடுகள் வரை ஒப்பந்தம் செய்து கொண்டால் 10 சதவீதமும், 12 மாத வெளியீடுகள் வரை ஒப்பந்தம் செய்து கொண்டால் 15 சதவீதமும், மேற்கண்டத் தொகையில் தள்ளுபடி செய்யப்படும். இருப்பினும் கொடுக்கப்படும் அளவுகள், கட்டணங்கள் குறித்து தேவஸ்தான பத்திரிகை ஆசிரியரின் (Editor) தீர்மானமே முடிவாகும்.

2. எந்த விதமான அறிவிப்பு இல்லாமல் விஷயங்களை ஏற்காமல் இருக்க ஆசிரியருக்கு உரிமை உண்டு.



# அறிவிப்பு

★ ★ ★

1. திருமலை மிகவும் புனிதஸ்தலம் என்பதையும் திருவேங்கடமுடையான் சக்திவாய்ந்த தெய்வமென்பதையும் கனவிலும் மறவாதீர்கள்.

2. தொன்று தொட்டுவரும் பணபாடுகளை இகழாதீர்கள்.

3. திருமலை புனித ஸ்தலமாதலின் அங்கு காலணி முதலியவைகளை உபயோகிக்காதீர்கள்.

4. திருமலைமேல் உள்ளவரை புஷ்பங்கள், வெற்றிலை பாககு முதலியவைகளை உபயோகிக்காதீர்கள்.

5. மீன், முட்டை, இறைச்சி முதலியவைகளையும் பீடி, சிகரெட்டு, சுருட்டு, கள், சாராயம் முதலிய லாகரி வஸ்த்துக்களை மலைக்கு எடுத்துச் செல்வதும் உபயோகிப்பதும் கொடிய பாவம் என்றறியுங்கள்.

6. நீராடித் தூய ஆடை உடுத்தி கோயிலுக்குச் செல்லுங்கள். கோயிலை எச்சிற்படுத்தாதீர்கள்.

7. கோயிலுக்குள் ஸ்வாமி தர்சனத்திற்குச் செல்லும் பொழுது வரிசை முறையில நின்று நிதானமாகச் செல்லுங்கள்.

8. திருவேங்கடவன் திருமுன்பில் பயபக்தியுடன் மௌனமாக நின்று ஸேவியுங்கள். உரத்துப் பேசுவதும் கிளர்ச்சி செய்வதும் ஸந்நிதியின் சாந்தியைக் கெடுப்பதால் மன்னிக்க முடியாத பெருந்தவறாகும்.

9. உங்களைத் தவறான மார்கத்தில் செலுத்தும் பண்டாக்களையும், தீர்த்த வாஸிகளையும், டவாலிகளையும் நம்பி உங்கள் காணிக்கைகளையும், பரார்த்தனைகளையும் வேறிடங்களில் செலுத்தி ஏமாந்து விடாதீாகள.

10. திருவேங்கடமுடையானுக்குச் சமர்ப்பிக்க வேண்டிய காணிக்கைகளைத் தங்கவாயில் (பங்காரு வாகிலி) பக்கத்திலுள்ள உண்டியில் செலுத்தி ரசீது பெறுங்கள்.

11. சத்திரங்களிலும் கோயில்களிலும் உள்ள ஸேவகர்கள் முதலியவர்கள், யாத்ரீகர்கள் விஷயத்தில் சரியாக நடந்து கொள்ளாவிடின் அவர்களைப்பற்றிய குற்றங் குறைகளை சத்திரம் கண்காணிப்பாளர் அவர்களிடமும் கோவில் மேலாளர்களிடமும் யாத்ரீகர்கள் முறை செய்து கொள்ளவேண்டும்.

12. எந்த ஏழை யாத்ரீகனும் செலவின்றித் தேவஸ்தானம் சத்திரத்தில் தங்கலாம். தர்மஸேவையின் பொழுது திருவேங்கடமுடையான் ஸேவையைப் பெறலாம்.



# இந்து சமயக் கையேடு

திரு அ. நடராஜன், திருப்பதி.

★ ★ ★

(முன் இதழ்த் தொடர்ச்சி)

## அத்தியாயம் - 11
## சமயமும் சமுதாயமும்

மனிதன் தனிப்பட்டமுறையில்ஞானத்தை அல்லது பேரறிவை நாடுபவன் என்பதோடு கூட அவன் கூட்டு வாழ்வை அவாவுகிற ஒரு விலங்கும் ஆவான்: அவன் நான்கு புருஷார்த் தங்களை அல்லது பேறுகளைத் தேடுகிறான்; சமுதாய விலங்கு என்னும் வகையில் சமுதா யத்திலுள்ள ஏனையோர் அனைவரும் செய்யும் முயற்சிகளிலும் அவன் பங்கு கொள்கிறான். உதறித்தள்ள இயலாத சமூக உறவுகள் அவ னுக்கு உள்ளன. கூட்டுறவு, குழு ஒற்றுமை, குழுநலன் போன்ற சமுதாய அலுவல்களுக் கான இயல்பூக்கங்களும் அவனுக்கு அமைந்தி ருக்கின்றன. ஒவ்வொரு தனி நபரின் பௌதிகக் கூறுகளையும் ஆன்மிக அம்சங்களை யும் இந்து சமயம் ஏற்றுக் கொள்வதைப் போன்றே, தனி நபருக்குரிய அம்சங்களை மட்டுமன்றி சமூகத் தொகுதியில் அவனுக்கு ஒரு சமுதாயப் பங்கு இருப்பதையும் அது ஏற்றுக் கொள்கிறது. எங்ஙனம் அவன் ஆன்மிக நோக்கில் தனது சொந்த உயர்வுக் கான முயற்சிகளை மேற்கொள்கிறானோ, அங் ஙனமே சமூகத்தின் உறுப்பினர்கள் அனை வருடனும் தனக்குள்ள ஒற்றுமை அல்லது சகோதரத்துவம் என்பதை வலியுறுத்தும் வகையில் அவன் தனது சமுதாய அலுவல் களை மேற்கொள்ளவேண்டும்.

இந்து சமயம் மிகவும் சமரசப் பான்மை கொண்ட ஒரு மதம் ஆகும். வேறுபாடு களுக்கிடையே சமுதாய ஒருமைப்பாடு என் பதை உணர்ந்து கொள்வதே அதன் ஒருமுனை முயற்சியாக எப்போதும் இருந்து வந்துள்ளது. வெவ்வேறு உருவங்களிலும் பெயர்களிலும் வழிபடப் பெறுவது ஒரே கடவுளே என்னும் தத்துவக் கொள்கையை எடுத்துரைப்பதன் வாயிலாக, அது பொது வான அல்லது ஒரே மனித சமுதாயத்தை ஏற்படுத்துவதை நோக்கமாகக் கொண்டு, மனித சமுதாயத்தின் உறுப்பினர்களுள் ஒவ்வொருவரின் வாழ்விலும் ஈசுவரனை அறிந்து கொள்வதையே சமயத்தின் குறிக் கோளாகக் கொண்டு வந்திருக்கிறது. இந்து சமயம் வெறும் அறிவிற்கோ இதயத்திற்கோ மட்டுமே நிறைவு அளிக்கும் வகையில் அமையவில்லை; அவற்றுக்கும் மேலான ஒன்றை அது நிறைவு செய்ய முற்படுகிறது. ஒவ்வொரு தனி மனிதனிடமும் உள்ள ஆன் மிகத் தன்மைக்கு அல்லது ஆன்மாவிற்கு நிறைவு தர அது முயலுகிறது. ஒவ்வொரு பிராணியின் இதயத்திலும் கரந்து நிற்கும் இறைமைக்கு அது முதலிடம் அளிக்கிறது. இறைவனிடத்திலும் இறைவனுக்காகவும் அவனது உலகில் வாழ்வது என்னும் தெய் விக வாழ்வை அது நமக்குப் போதிக்கின்றது. இதுவே இந்து மதத்தின் குறிக்கோள். ஒவ் வொரு மனிதனுக்கும் சுதந்திரமான வாழ்வு நெறியான வாழ்வு, கடவுளின் படைப்பு முழுவதையும் அணைக்கும் அன்பான வாழ்வு என்னும் ஆன்மிக வாழ்வின் மூன்று லட்சியங் களை வழங்குவதற்கு அது உறுதியாக வகை செய்கிறது.

இந்து மதம மிகச் சிறந்த ஒரு சமுதாய சக்தியும் தெய்வீக சக்தியும் ஆகும். சில மதங்களைப்போல் அது சமூகத்தின் ஒருமைக்கோ மேம்பாட்டிற்கோ எதிரானதோ அல்லது சமுதாய அலுவலைப் புறக்கணிக்கும் ஒன்றானதோ இல்லை. இவ்வுலகிலேயே மனிதன் வளமான வாழ்வு பெறுவதை அது ஏற்றுக்கொள்கிறது. ஒவ்வொரு பாத்திரத்திற்கும் விதிக்கப்பட்டுள்ள அறநெறிகளு அல்லது தர்மத்திற்கு ஏற்ப எல்லோரும் பங்கேற்க வேண்டிய இறைவனின் மாபெரும் அருள் நாடக அரங்கமாக உலகம் முழுவதையும் அது கருதுகிறது.

இந்து சமயம் சமுதாயத்தின் அமைப்பையும் அதன் அலுவல்பிரிவுகளையும் ஒவ்வொரு மனிதனின் பருவ முதிர்ச்சி, வளர்ச்சி, அபிவிருத்தி, நிறைவுக் காலங்கள் ஆகியவற்றையும் கவனத்துடன் ஆராய்ந்துள்ளது. அதாவது, சாதிப்பகுப்பு என்பது சமுதாயத்தில் ஒருவனுக்குள்ள அலுவல்களை ஆதாரமாகக் கொண்டிருப்பது; ஆசிரமங்களின் அல்லது வாழ்க்கை நிலைகளின் பாகுபாடு மனிதனின் வெவ்வேறு வாழ்க்கைப் பகுதிகளைப் பொறுத்திருப்பது. சில விஷயங்களில் இவற்றுக்கு மேலும் முழுமையான, ஆழ்ந்த உட்கருத்து ஒன்று அளிக்கப்படுகிறது என்பது என்னவோ உண்மையே; ஆயினும், இப்பிரிவுகளை ஒன்றுக்கொன்று தொடர்பில்லாத பகுதிகளாகக் கருத முடியாது. எந்த சமுதாயத்திலும் தனிப்பட்ட, அதாவது, ஒன்றுக்கொன்று தொடர்பில்லாத வகைகள், அலுவல்கள் என்பவற்றைக் காண்பது கடினம். விடுதலை (மோட்சம்), அறநெறி (தர்மம்), அன்பு (காமம்) என்னும் சொற்களுக்கு சமயத்தில் புதிய மதிப்புக்களை ஒருவன் கண்டுணர்கிறான். வேறும் அரசியல் சமுதாயம் ஒன்றில் இத்தகைய விளக்கங்களைக் காண்பது இயலவே இயலாது. இப்போது இருப்பது போல், வெவ்வேறு தரத்திய அறிவுத் திறமும் ஆற்றலும் ஆளுமையும் உடைய ஆட்களினால் ஆகியிருக்கும் சமுதாயம் சமய உணர்வின் இந்தக் கண்டுபிடிப்பின் முழுக்கருத்தையும் உணருவதில்லை. இருப்பினும், விடுதலை, அறநெறி, அன்பு என்னும் மூன்று லட்சியங்களையும் ஒருமைப்படுத்த அல்லது ஒருங்கிணைக்க சமயம் உதவவே செய்கிறது. இவற்றுக்கு தன்னிச்சை அல்லது ஒழுங்குப் புறக்கணிப்பு, ஆதிக்க வெறி, காமவேட்கை என்று கீழியல்பினர் பொருள் கொள்கின்றனர். ஆனால், சமயத்தினால் புடம் செய்யப்பட்ட நிலையில் அவை ஆன்மாவின் அற்புத வெளிப்பாடுகளாக அமைகின்றன.

சாதாரண மனிதனின் அலுவல்கள் உயர் குறிக்கோள்களின்பால் திருப்பப்படும்போது, மனிதனின் சமுதாய வாழ்வு முழுவதும் மாறுதலடைந்து நாகரிகமானதாய் அமைகின்றது. இந்து மதப் பெரியோர்களின் அறிவுரைகளும் நடைமுறைப் பழக்கங்களும், அகந்தை, போட்டி, பொறாமை, வன்முறை, பேராசை ஆகியவற்றில் களியாட்டம் கொள்ளும் மனிதனின் கீழ்த்தரமான இயல்பினை அடக்கி, மனிதனை நாகரிகப் படுத்துவதற்குப் பயன் படுத்தப்படுகின்றன. மனிதனின் தனிப்பட்ட அல்லது சமுதாய வாழ்வின் புதிய பரிமாணமான தோர் உயர் சக்தியாக சமயம் விளங்குவதால், அது அவனுடைய முக்கியமான, கடந்த கால வாழ்வின் மீது ஆதிக்கம் பெற முற்படுகிறது. இந்து சமயத்தில் விடுதலை, நீதி, அன்பு என்னும் முப்பெரும் தத்துவங்களுக்கு முற்றும் இணங்கவே அதற்கான முயற்சி மேற்கொள்ளப்படுகிறது. நாம் விரும்புவதைவிட அதிக அளவிற்கு அம்முயற்சி வெற்றி பெறவில்லை என்பது, பொதுவாக எங்குமே சமயங்கள் நெகிழ்வுத் தன்மையை இழந்து, கீழ்நிலைகளில் காணப்படும் பேராசை, வெறியுணர்வு போன்ற தவறுகளை சமூக, ஆன்மிகச் செயல்களாகிய உயர்நிலைகளில் மீண்டும் செய்ய முற்பட்டு,

உண்மையான ஆன்ம நேய உந்துதலின் சக்தியைக் குறைத்து விடுகின்றன.

போட்டி நோக்குடன் செயல்படும் பிற சமயங்களைப் போலல்லாது இந்து சமயம் பிற சமய அறிஞர்களின் உற்சாகத்தைக்கூட, அச்சமயங்கள் எடுத்துரைக்கும் உண்மைகள் பால் தனக்குள்ள பரந்த நோக்கினுல் கட்டுப்படுத்த முயன்றுள்ளது. அமைதியான முறையில் அணுகி, இந்தியாவிற்கு உள்ளேயும் வெளியிலும் அவர்களை ஆற்றலற்றவர்களாகச் செய்திருக்கிறது. அமைதி (சாந்தி), அறிவு (ஞானம்), அதாவது, அறிவு வாயிலாக அமைதி, அமைதி வாயிலாக அறிவு-என்னும் இருகுரல்கள் இந்தியவரலாற்றில் பலதடவை ஒலித்து வந்துள்ளன. இவ்விரு கொள்கைகளை அல்லது குறிக்கோள்களை அடிப்படையாகக் கொண்டு அமைந்துள்ள சமுதாய வாழ்வு சுகத்தையோ பாதுகாப்பையோ அல்லது மோட்சத்தையோ கூட ஆதாரமாகக் கொண்ட சமூக வாழ்வைவிட உயர்ந்த அளவிற்கு நாகரிகமும் பண்பும் நிறைந்ததொரு நிலையை வெளிப்படுத்த முற்படுகின்றது.

ஆன்மிக நோக்கில் மனிதன் மீண்டும் திருத்தி அமைக்கப்படவேண்டும். இதற்கு, உலகம் என்பது தற்செயல் அல்லது குழப்பம் என்பனவற்றை அடிப்படையாகக் கொண்டதில்லை, அது ஒழுங்கு முறையில் அமைந்தது, தெய்விகமானது என்பதை ஒவ்வொருவனும் உணரவேண்டும். ஒழுங்கு நிறைந்த உலகமே பகுத்தறிவுடன் கூடியவனின் குறிகோளாகும். நாம் முன்பு கவனித்ததுபோல், அறம் அல்லது தர்மம் என்பது உலகை இயக்கும் ஒழுங்குமுறையே ஆகும; தக்கவாறும தன்னலமின்றியும் பயனை எதிர்பாராமலும் செய்யப்படும் எல்லாச் செயல்களுமே தனி மனிதனின் வீடு பேறு நிலைக்கும் சமுதாயத்தின் மேம்பாட்டிற்கும் உதவுபவையே ஆகும். செயல்களை நன்கு செய்தல் அல்லது கர்ம யோகம் என்பதே பிரம்மானுபவத்திற்கு அல்லது கடவுள் அநுபவத்திற்கு இட்டு செல்லுகிறது. பயன்களை எதிர்பாராமலும் சம்பிரதாயம் அல்லது மரபு, ஆன்மிக அ நோக்கு ஆகியவற்றினுலும் பெரும் ஞான களினுலும் விதிக்கப்பட்டிருக்கும் தர்ம திற்கு இணங்கியும் செய்யப்படும் எல்லா செயல்களையுமே அறச் செயல் என்று இந் மதம் குறிப்பிடுகிறது. அத்தகைய செய களின் சிறப்பியல்பு சமுதாய நலமே; ஏ எனில், சமுதாயத்திற்குத் தீங்கு விளைவி கும் செயல்கள் பெரும்பாலும் தன்னலமு அகந்தையும் நிறைந்தனவாகவே இரு கும். கடவுள் (தர்மம்) அநுமதித்துள்ள தனி மனிதர் நோக்கிலோ, சமூக நோக்கிலே நல்லனவும் அல்லாத, தீயனவும் அல்லா செயல்களைச் செய்யவேண்டும் என்று இந் சமயம் வலியுறுத்துகிறது என்பது உ மையே; ஏன்எனில், தமக்கு எ நல்லவை, எவை தீயவை என்பதைப் பற்றி அறிவு மனிதர்களுக்கும் சரி, மனித சமூக களுக்கும் சரி இன்னமும் உறுதியாக ஏற்ப வில்லை. அவர்களின் அறிவுக்கு அப்பா பட்டதாயுள்ளது அது. எனவே, கட களைச் செய்யும் போது சாத்திரங்களில் ந பிக்கை வைத்துச் செயல் படுவதே முக்கிய ஆகிறது. ஏன்எனில், அந்த நம்பிக்கை தனி மனிதர்களுக்கும் சரி, சமூகங்களுக் சரி இறுதியில் நலமாக விளங்கும் ஓர் உ நலத்திற்கு இட்டுச் செல்லுகிறது.

மக்கள் சமுதாயம் ஒன்றின் அரசி வாழ்வு அதன் உறுப்பினர்களின் ஒழு வியல் மற்றும் அறவியல் பண்புகளைப் பி பலிக்கின்றது. சமுதாயம் என்பது, அத முழுக்கருத்தின் நோக்கில், அதன் உ பினர்களுக்கு சுதந்திரத்தையும் உரிமைக யும் உறுதிப்படுத்தும் அரசும் பிற நிறுவ களுமே ஆகும். தற்காலத்தில் மக்கள

தேவைகளை நிறைவேற்றவேண்டிய நிறுவனங்களை அரசு மேற்கொண்டு விட்டிருக்கின்றது. தனிநபர்களினால் நடத்தப் பெற்று வந்த இத்தகைய நிறுவனங்களைத் தேசியப்படுத்தியதற்கும சமுதாயப்படுத்தியதற்கும், மக்களுக்கு சமூக, ஆன்மிக சுதந்திரம் மற்றும் கடமைகள் பற்றிய விழிப்பு ஏற்பட்டிருப்பது பெருமளவிற்குக் காரணமாகும். வாழ்க்கையின்பால் ஒரு பெருமதிப்பினையும் ஒவ்வொருவரின் உரிமைகளையும் எடுத்துரைத்த பெரியோர்களின சமயப் போதனைகளினால்தான் இந்த விழிப்பு தோன்றியது. குறிக்கோளாகக் கொள்ளப்பட்டு வரும் தனி நபர் சுதந்திரம், ஏழை — பணக்காரர், உயர்ந்தோர் — தாழ்ந்தோர் ஆகிய இரு சாராருக்கும் சமமாக இயங்கும் சட்டம், நோய் நொடி, பஞ்சம், புரட்சி போன்ற சமயங்களில் பாதுகாப்பும் பரிவும் அளிக்கும் செயல்களின் வாயிலாக வெளிப்படுத்தப்படும் அன்பு என்னும் இம்மூன்று உண்மைகளையும் பாரதத்தில் போதித்தது சமயமே ஆகும்.

மாபெரும் சமய உண்மைகளே வாழ்க்கை நிலைகளின் சமுதாய மேம்பாட்டிற்கான பெரும்பணியை ஊக்குவித்தன. பொருள் முதல் அரசிலும் சரி, சமதரும அரசிலும் சரி இன்றைய அரசுகளை ஊக்குவித்து இயக்கும் சமுதாயதத்துவத்திற்கு ஆதாரம் அறம் (தர்மம்), வீடு (மோட்சம்), ஆசை (காமம்)- நீதி, விடுதலை, அன்பு—மற்றும் கருணை (பரிவிரக்கம், ஆகியவையே. இந்து மதத்தில் சமயத்தின் கருத்தியல் அல்லது இலட்சிய நோக்கு நடைமுறைத்தன்மையுடன் கூடியிருப்பதால் பிராணிகள விஷயத்திலும் இது செயல்படுகிறது. பிராணிகளும் அரசின் பொருளாதார அமைப்பைச் சேர்ந்தனவாயிருப்பதால், மனித இன நலபபற்று என்பது பிராணிகளையும் அணைத்துச் செல்வதாய் இருக்கிறது. இந்து மதம்போன்ற உணமை சமயத்தின் குறிக்கோள் மதசம்பந்தமற்ற அலுவல்கள் அனைத்திலும்கூட மக்கள் அறம், அன்பு, வீடு என்னும்மூன்று கொளகைகளைப் பின்பற்றி நடக்கச்செய்வதேயாகும. அங்ஙனமே, சமூக அல்லது அரசியல் சட்டங்களை இயற்றுவதில் இக்கொள்கைளைப் பின்பற்றுவது ராஜதர்மம் ஆகும். ராஜதர்மம் என்பது மக்கள் சுயதர்மத்தைப் பின்பற்றுவதை மேம்படுத்துவதாகவும் சாத்தியமானதாகச் செய்வதாகவும் இருக்கவேண்டும். அது மனிதனைச் சமுதாயநோக்கில் மேம்படுத்தி, அவனது கீழ்த்தரமான அல்லது தன்னலம் நிறைந்த இயல்புகளை மாற்றியமைப்பதைத் திருத்தி விரைவுபடுத்தலாம்; மற்றும், சட்டத்தின் கட்டுப்பாடுகளைக் கொண்டு, மக்களின சட்டத்திற்குப் புறம்பான அல்லது உண்மையல்லாத இயல்பினைக் கட்டுப்பாட்டிற்கு கொண்டு வரலாம். ஆனால், மெய்யான விடுதலையான மோட்சத்தைப் பெறுவதற்காக இருப்பதே ராஜதர்மம்.

(தொடரும்)

திருமலை - திருப்பதி தேவஸ்தான

## ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி கோயில். (திருமலை).

# ஆர்ஜிதக் கட்டண விதிகள்

ஹாரத்தி (ஒவ்வொன்றுக்கும்) கட்டணம் ரூ 1-00

### 1. ஸேவைகள் (ஸேவிப்பது மாத்திரம்)

தோமாலை ஸேவைக்குப் பிறகு தரிசனம் ரூ. 4-00

அர்ச்சனை (ஸஹஸ்ரநாமம் அஷ்டோத்தரம்) பிறகு தரிசனம் ரூ. 3-00

ஏகாந்த ஸேவைக்குப்பிறகுதரிசனம் ரூ. 4-00

பூலங்கி ஸேவைக்குப் பிறகு தரிசனம் ரூ. 2-00

திருமஞ்சனம் ஸேவைக்குப் பிறகு தரிசனம் ரூ. 3-00

குறிப்பு:- ஒவ்வொரு டிக்கெட்டுக்கு ஒவ்வொரு நபர் மட்டும் அனுமதிக்கப்படுவர்.

### 2. கைங்கர்யங்கள் (செய்து வைப்பது)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | ஆமந்த்ரணோத்ஸவம் | ரூ. 130 | 6. | கஸ்தூரிக் கிண்ணி | ரூ. 100 |
| 2. | பூலங்கி ஸேவை | ரூ. 60 | 7. | ஜாபாரக் கிண்ணி | ரூ. 100 |
| 3. | திருமஞ்சம் | ரூ. 450 | 8. | ஸஹஸ்ர கலசாபிஷேகம் | ரூ. 2000 |
| 4. | கம்பூராக் கிண்ணி | ரூ. 250 | 9. | திருப்பாவாடை | ரூ. 4000 |
| 5. | புனுகுசட்டம் கிண்ணி | ரூ. 100 | 10. | கோயிலாழ்வார் திருமஞ்சனம் | ரூ. 1745 |

குறிப்பு:- 1. ஆமந்த்ரண உத்ஸவம் நடத்தி வைப்பவர் பகலில் நடக்கும் தோமாலை சேவைக்கும், அர்ச்சனைக்கும், இரவு வேளையில் நடக்கும் ஏகாந்த சேவைக்கும், தாமும் தம்மைச் சேர்ந்தவர்களுமாக ஆறு நபர்கள் உள்ளே சென்று பெருமாளைச் சேவிக்கலாம். பகலில் பொங்கல் பிரசாதம் நிவேதனமான" பிறகு அவர்களுக்குக் கொடுக்கப்படும்.

2. ஒவ்வொரு வியாழக்கிழமை மாலையில் நடத்தி வைக்கப்படும்: பூலங்கி செய்து வைப்பவர்கள் தாமும் தம்மைச் சேர்ந்தவருமாகப் பத்து பேர்கள் உள்ளே சென்று பெருமாளைச் சேவிக்கலாம்.

3-லிருந்து 7-வரை உள்ள சேவைகள் ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் செய்விக்கப் படும். 3-வது திருமஞ்சத்திற்கு 2 நபர்கள் கிண்ணிகளுடன் மொத்தம் 4 நபர்கள் உள்ளே செல்லலாம். 4-வது கம்பூராக்கிண்ணிக்கு 2 நபர்களும், 1 நபர் கிண்ணியுடன் மொத்தம் 3 நபர்கள் உள்ளே செல்லலாம். 5-லிருந்து 7-வரை உள்ளவற்றிற்கு ஒரு நபர், 1 நபர் கிண்ணியுடனும் மொத்தம் 2 நபர்கள் செல்லலாம்.

8 லிருந்து 10 ஸஹஸ்ர கலசாபிஷேகம், திருப்பாவடை, கோயில ஆழ்வார் திரு மஞ்சனம் ஆகிய இம்மூன்றும் ஒரு நாளில் பகற்பொழுதில் செயயப்படுபவை. இக்கைங்கா யங்கள் முடிந்தவுடன் வடை, லட்டு, அப்பம், தோசை முதலிய பிரசாதங்களும், 8-வதாகிய ஸஹஸ்ர கலசாபிஷேகத்திற்கு வஸத்ரபஹுமானமும் இவர்களுக்குக் கொடுககப்படும். 8-வது ஸேவை புதன் கிழமையன்றும், 9-வது ஸேவை வியாழனன்றும் நடைபெறும்.

பொது விதி:- வழக்கத்தையும், சந்தர்ப்பத்தையும் அனுஸரித்து தத்தத்திற்கும், ஹாரத்திற்கும் தனித்தனியாக ஒவ்வொரு ரூபாய் செலுத்தப்பட வேண்டும்.

## 3. உத்ஸவக் கட்டணங்கள்

| | | | |
|---|---|---|---|
| வஸந்தோத்ஸவம | ரூ. 2000 | பிரம்மோத்ஸவம் (2-ம் வகுப்பு) | ரூ. 750 |
| பிரம்மோத்ஸவம் (முதல் வகுப்பு) | ரூ. 1500 | கல்யாண உத்ஸவம் | ரூ. 1000 |

குறிப்பு:- 1. வஸந்தோத்ஸவம செய்து வைப்பவர்களின் சௌகர்யத்தையும் கோயில் சௌகர்யத்தையும் அனுசரித்து மூன்று நாட்களிலோ அதற்கும் குறைவான நாட் களிலோ நடத்தி வைக்கப்படும். செய்து வைப்பவர்களுக்கு வஸ்த்ரம் முதலியவைகள் பஹுமானமாகக் கொடுக்கப்படும்.

2. கல்யாண உத்ஸவம்;- உத்ஸவ முடிவில், வழக்கத்தையொட்டி வஸ்த்ர பஹுமானம், லட்டு, வடை, அப்பம், தோசை முதலியவைகளும் கொடுககப்படும் பிரசாதங்களையோ பணியாரங்களையோ செய்து வைப்பவர்களே எடுத்துச் செல்ல ஏற்பாடுகள் செய்து கொள்ள வேண்டும். இவ்வுத்ஸவத்தை நடத்த விரும்புவர்கள் 7 நாட்களுககு முன்பே தொகையை D. D. (Demand Draft) மூலம் செயலாட்சி தலைவர், தி.தி. தேவஸ்தானம், திருப்பதி. என்ற விலாசத்திற்கு அனுப்பவேணடும். உற்சவ நாட்களைத தவிர மற்ற நாட்களில பொதுவாக தினமும் நடத்தப்படும்.

3. முதல் வகுப்பு பிரம்மோத்ஸவம் செய்து வைப்பவர்கள் தாமும் தம்மைச் சேர்ந்தவர்களுமாக 12 பேர்கள் இவ்வுத்ஸவம் நடக்கும் ஒவ்வொரு நாளும் (பகல்) தோமாலை ஸேவை அர்ச்சனை இவைகளுக்கும் (இரவு) ஏகாந்தஸேவைக்கும் உள்ளே செல்லலாம். (தத்தம் செய்த நாட்களிலிருந்து 2 நாட்கள் மட்டும்).

இரண்டாம் வகுப்பு உத்ஸவத்தை செய்து வைப்பவர்கள் தாமும் தம்மைச் சேர்ந்தவர்களுமாக 6 பேர்களே மேற்படி ஸேவைகளுக்கு உள்ளே அனுமதிக்கப்படுவர். செய்து வைப்பவர்களின் சௌகர்யத்தையும் கோயில் சௌகர்யத்தையும் அனுசரித்து 3 அல்லது அதற்கும் குறைந்த நாட்களில் இவ்வுத்ஸவங்கள் நடத்தி வைக்கப்படும். உத்ஸவம் செய்து வைப்பவர்களுக்கு ஒவ்வொரு நாளும் பொங்கல், தோசை கொடுக்கப்படும். முடிவில் வஸ்த்ர பஹுமானமும், பிரசாதங்களும் வழங்கப்படும்.

## 4. வாஹனங்கள்

1. ஸர்வபூபாலம் வஜ்ரகவச சேவை 72+1 (ஹாரத்தி) ரூ. 73
2. ஸர்வபூபாலம், கல்பவ்ருக்ஷம், பெரிய சேஷ்வாஹனம் ஸூர்யப்ரபை, புஷ்பரதம், முத்துப்பந்தல், தங்ககருடவாஹனம் தனித்தனி 62+1 (ஹாரத்தி) ரூ. 63

3. வெள்ளி கருடவாஹனம், ஹனுமந்தவாஹனம், சின்ன சேஷவாஹனம, குதிரை வாஹனம், ஸிம்ஹவாஹனம், ஹம்ஸவாஹனம், சந்திரபிரபை, யானைவாஹனம் தனித்தனி 32+1 (ஹாரத்தி) ரூ. 33

குறிப்பு:- வாஹன உற்சவம் செய்து வைப்பவருக்கு ஒரு வடை பிரசாதமாகக் கொடுக்கப்படும்.

(3—4) பொதுவிதி:- ஹாரத்திற்கும் தத்தத்திற்கும வழக்கத்தையொட்டி தனித் தனி ஒவ்வொரு ரூபாய் அதிகப்படியாகச் செலுத்தப்பட வேண்டும.

## 5. பிரஸாதங்கள் (கால் சோலா தளிகை ஒன்றுக்கு)

| | | | |
|---|---|---|---|
| தத்யோதனம் | ரூ 40 | ஸாகர்பாத் | ரூ. 80 |
| புளிஹோரை | ,, 50 | கேஸரிபாத் | ,, 90 |
| பொங்கல் | ,, 55 | பாயஸம் | ,, 85 |
| சர்க்கரைப் பொங்கல் | ,, 65 | சீரா | ,, 155 |

குறிப்பு;- நிவேதனம் ஆனதும் செய்து வைப்பவர்களுக்குப் பிரசாதங்கள் கொடுக் கப்படும். பிரசாதங்களையோ, பணியாரங்களையோ எடுத்துச் செல்ல ஏற்பாடுகள் செய்து கொள்ளவேணடும்.

## 6. படிகள் (படி ஒன்றுக்கு)

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| லட்டு | ரூ. 450 | போளி | ரூ. 225 | ஸுகியம் | ரூ. 200 | அப்பம் | ரூ. 23( |
| வடை | ,, 250 | தோசை | ,, 100 | ஜிலேபி | ,, 450 | தேன்துளை | ,, 20( |

குறிப்பு:- நிவேதனமானவுடன் செய்து வைப்பவர்களுக்கு ஒவ்வொரு வகையில் 3( பணியாரங்கள் கொடுக்கப்படும். பிரசாதங்களையோ அல்லது பணியாரங்களையோ செய்து வைப்பவர்களே எடுத்துச் செல்ல ஏற்பாடு செய்து கொள்ள வேண்டும்.

## 7. நித்திய ஸேவைகள்

1. நித்திய கற்பூர ஹாரத்தி ரூ. 21
2. நித்திய நவநீத ஹாரத்தி ரூ. 42
3. நித்திய அர்ச்சனை ரூ. 42

குறிப்பு:- நித்திய ஸேவைகளுக்கு சேவை கட்டணத்திற்குச் சரியான தொகையை முன்பே முதல் வருஷத்தில் ஒவ்வொரு சேவைக்கும் செலுத்த வேண்டும்

## 8. பிரசாதங்களின் விலை

| | | | |
|---|---|---|---|
| அப்பம் | ரூ. 1 | கல்யாண உற்சவம் தோசை | ரூ. 0—2. |
| ஜிலேபி | ,, 6 | தோமால சேவை ,, | ,, 0—5 |
| போளி | ,, 1 | ஏகாந்த சேவை ,, | ,, 0—7. |
| தேன்துளை | ,, 2 | | |



# முக்கவி கண்ட காப்பியம்

திரு. T. G அனந்த சுப்ரமண்யம, திருப்பதி
(காபேயன்)

## "ஆரண்ய காண்டம்"

(முன் இதழ்த் தொடர்ச்சி)

சீதையைத் தேடிச்செல்வோமென்று இராமனிடம் இலக்ஷ்மணன் கூற, இராமனும் லக்ஷ்மணனும் அவ்வாறுத் தேடிச் செல்லும் வழியில் தேர்ச்சுவடு ஒன்றுதெரிகிறது. அதைப் பின்பற்றியே செல்லுகிறார்கள். அவ்வழியில் இராவணனின் வீணை அடையாளமிட்ட கொடி அறுந்து விழுந்திருப்பது, வில் முறிந்து கிடப்பது, சூலம், அம்புபுருத்தூணி, கவச, குண்டலங்கள் முதலியவை ரத்தத்தோடு கலந்து இருப்பது ஆகியவைக் கண்டு இராவணனும்-ஜடாயுவும் யுத்தம் செய்திருக்கவேண்டுமென்றுஇராமன் நினைத்து ஜடாயுவைத்தேடி வருகிறான் என்று கம்பர் வர்ணிக்கிறார். இது அவ்வளவு பொருத்தமில்லை. ஏனெனில் சீதையை யார் தூக்கிச் சென்றார்கள் என்று சந்தேகப்பட்டுத் தேடி வரும் பொழுது, ஜடாயுவை இராக்ஷஸனென்று சந்தேகித்து, இராமன்ஜடாயுவிடம் நெருங்க அப்பொழுது ஜடாயு இராவணனைப் பற்றிக் கூறுவதாக வால்மீகி கூறுவதுதான் பொருத்தம்.

இவர்கள் இராவணனைப் பற்றிச் சந்தேகிப்பது அவ்வளவு பொருத்தமாக இல்லை. கம்பர், ஜடாயு பரமபதம் அடைந்தாரென்று கூறுகிறார். அதாவது மஹா விஷ்ணுவின் அவதாரமான இராமனின் பாதங்களைத் தரிசித்தவுடனே ஸ்ரீவைகுண்டத்தை அடைந்தாரென்று கூறுகின்றார். வால்மீகி அவ்விதம் சொல்லவில்லை. இராமன் "நீ பரம பதம் அடைவாய்" என்றுகூறி, பிரஹ்மமேத ஸம்ஸ்காரம் செய்தாரென்று கூறுகிறார். வால்மீகி இராமனைச் சாதாரண மனிதனாகவே மதித்து எழுதி வருகிறார். கம்பர் இராமன் பகவானென்ற கருத்தைக் கொண்டு எழுதி வருகிறார். ஆனால் இராமன் ஜடாயுவிற்கு ஈமக்கடன் செய்தான் என்று கூறும்பொழுது இராமனை மனிதனாக்கி விட்டார் கம்பர்.

துளசிதாஸரும் இராமனின் சீதாவியோக வேதனையை அதிகமாக வர்ணிக்கவில்லை. வால்மீகி வர்ணித்ததையே சுருக்கமாகக் கூறிவிட்டார். ஹநுமந்நாடகத்தில் சீதையை நினைத்து இராமன் படும் துயரத்தைச் சொல்லுகிறார்.

"वक्त्रं वनान्ते सरसीरुहाणि
भृङ्गाक्षमाला जगृहुर्जपाय ।
एणीदृशस्तेऽप्यवलोकय वेणीं
अङ्गं भुजङ्गाधिपति र्जुगोप ॥"

"ஹே! சீதே!! உன் முகத்தைப் பார்த்து தாமரை மலர்கள், தாங்களும் காந்தியுடையதாக ஆகவேண்டுமென்றுநினைத்து வண்டுகளாகிய ஜபமாலையைஉருட்டுகிறதோ!" என்று. அதாவது தாமரை மலர்களில் மதுவிற்காக வண்டுகள் வருவதைக் கவி வர்ணிக்கிறார். "சீதையே உன் கருமையான, சுருண்ட, நீண்ட கூந்தலைப் பார்த்து, கருநாகங்கள் உன்கூந்தலைப் போல் அழகாக இருக்க முடியவில்லையே என்று நினைத்துதான் புற்றுக்குள் மறைந்து கொள்கின்றனவோ", என்று

இராமன் சீதையின் ஒவ்வொரு அங்கங்களை யும் கூறிப் புலம்புவதை கவி வர்ணிக்கின் ருர்.

அத்யாத்மராமாயணத்தில் ஒரு சிறப்பு: அதில் பரமேச்வரன் பார்வதிக்கு கீழ்வரு மாறு சொல்லுகிருர்.

''இராமன், மாரீசனைக் கொன்று திரும்பி வரும்பொழுது மனதில் நினைக்கிருன். நாம் மாயா சீதையை ஆச்ரமத்தில் விட்டுச் சென்றதை இலக்ஷ்மணன் அறியான். மேலும் இராவணன் எடுத்துச்சென்றது மாயா சீதை தானே என்று சும்மா இருந்து விட்டால், இராவணுதி வதங்கள் எவ்விதம் நடைபெறும். மேலும் பிரம்மாவினுல் பிரார்த்திக்கப்பட்டு மனுஷ்யாவதாரம் எடுத்துள்ளதாலும், மனி தர்கள் போலவே நடந்து கொள்ளவேண்டும்'' என்று.

"लक्ष्मणस्तन्न जानाति मायासीतां मया कृतां !
यद्यहं विरतो भूत्वा तूष्णीं स्थास्यामि मन्दिरे ॥
तदा राक्षसकोटीनां वधोपायः कथं भवेत् ।
अहं मनुष्यभावेन जातोऽस्मि ब्रह्मणार्थितः ॥
मनुष्यभावमापन्नः किञ्चित्कालं वसामि कौ ॥"

இராமன் சீதையைத் தேடும் பொழுது ஜடாயுவைப் பார்த்து, இராக்ஷஸனென்று சந்தேகித்து வில்லில் நாணேற்றியது முதலிய வைகள் வால்மீகியைப் பின்பற்றியே அத் யாத்மராமாயணம் சென்றுள்ளது. ஜடாயு மரணத் தருவாயில் இருக்கும்பொழுது ''இராம! இராம!!'' என்று கூறிக்கொண்டி ருந்தார். கீதாசாரியன் கூறுகிருன்.

"अन्तकाले च मामेव स्मरन्मुक्त्वा कलेवरम् ।
यः प्रयाति स मद्भावं याति नास्त्यत्र संशयः ॥

''எவனொருவன் இறக்கும்பொழுது என்னை நினைத்தும், என் நாமத்தை உச்சரித்தும் உயிர் விடுகிருனே! அவன் என்னையே அடை வான்'' என்று. இக்கருத்தைப் பெரியா வார்

'' எய்த்தார், எய்த்தார், எய்த்தார் என்று
இல்லத்தாரும் புறத்தாரும்
மொய்த்து, ஆங்கு அலறி முயங்க, தாம்
போகும்போது உன்மத்தர் போல்
பித்தே ஏறி, அனுராகம் பொழியும் போது
எம் பெருமானோடு
ஒத்தே சென்று அங்கு உள்ளம் கூடக்
கூடிற்றாகில்-நல்உறைப்பே '' என்று

''உடலை விட்டு உயிர் பிரியும் காலத்தில் நம்மை ஏமாற்றி விட்டுப் போய் விட்டாரே என்று, வீட்டிலுள்ளவர்களும் சுற்றத்த ரெல்லாரும் ஒன்று கூடி கட்டிக் கொண் அழுது உன்மத்தர்களைப் போல் நெஞ் கலங்கி அனுராகம் பொழியும்போது, பெ மானிடத்தில் பக்தி உண்டாகி அவன்பா மனம் கூடினாலும் நல்லதேயாகும்''.

ச்ருதி கீதையில்,

"निभृतमरुन्मनोऽक्षदृढयोगयुजो हृदि ।
यन्मुनय उपासते तदरयोऽपि ययुः स्मरणात् ॥"

என்று காணப்படுகிறது. ஆகையால் ஜடா மோக்ஷத்தையடைந்தாரென்பதில் சந்தே மில்லை.

"गृध्रराज महासत्त्व संस्कृतश्च मया व्रज"

என்ற வால்மீகியின் கருத்தை துளசிதாஸ அப்படியே கூறுகிருர்.

"तनु तजि तात जाहु मम धामा ।
देऊँ काह तुम्ह पूरनकामा ॥"

'ஹே' தந்தையே!! தாங்கள் சரீரத்தை விட்டு என்னுடைய இருப்பிடமான வைகு தத்தையடைவீர்கள். தங்களுக்கு நா

கொடுக்கவேண்டியது இனி ஒன்றுமில்லை தாங்கள் பூர்ணகாமனாக ஆகிவிட்டீர்கள்' என்று கூறுகிறான் இராமன். மற்றொரு அழகான கருத்தைத் துளசிதாஸர் கூறுகிறார்.

"सीताहरन तात जनि कहहु पिता सन जाइ ।
जौं मैं राम त कुल सहित कहिहि दसानन आई॥

தந்தைக்குச் சமமான ஜடாயுவே! தாங்கள் ஸ்வர்க்கத்திற்குச் சென்று அங்கு என் தந்தையைப் பார்த்து, ஸீதாபஹரணம் விஷயத்தைச் சொல்லவேண்டாம். ஏனெனில் இன்னும் கொஞ்ச நாளில் இராவணன், இந்திரஜித் முதலானவர்கள் குடும்பத்தோடு அங்கு வருவார்கள் அவர்கள் சொல்லுவார்கள்" என்று பிரார்த்திக்கிறான் இராமன். இதனால் இராமன் இராவணவதம் செய்யப் போகிறான் என்பதை மறைமுகமாகக் கூறுகிறான் என்பதாகும்.

இந்தக் கருத்தை அநுமந்நாடகத்தில் பார்க்கலாம்

"तात त्वं निजतेजसैव गमितः स्वर्गं व्रज स्वस्ति ते।
ब्रूयस्त्वेकमिमां वधूहृतिकथां तातान्तिके मा कृथाः॥
रामोऽहं यदि तद्दिनैः कतिपयैः व्रीडानमत्कन्धरः ।
सार्धं बन्धुजनेन सेन्द्रविजयी वक्ता स्वयं रावणः ॥

என்று. மேலும் ஜடாயு சரீரத்தை விட்டவுடன் திவ்யரூபத்தை அடைந்ததாகவும், நான்கு கைகளைக் கொண்டவராக விளங்கினார் என்றும் வர்ணிக்கப்பட்டுள்ளது.

"गीध देह तजि धरि हरिरूपा
भूषण बहु पटपीत अनूपा
स्याम गात बिसाल भुजचारी
अस्तुति करत नयन भरि बारी"

இந்தக் கருத்தை அத்யாத்மராமாயணத்திலும் பார்க்கலாம்.

"शंखचक्रगदापद्म किरीटवरभूषणैः ।
द्योतयन्स्वप्रकाशेन पीताम्बरधरोऽमलः ॥"

கம்பராமாயணத்தில் மேற்படி கருத்துக்கள் ஒன்றும் காணப்படவில்லை. மாம்ஸ பக்ஷணியான கழுகிற்கு மோக்ஷம் கொடுத்ததால் இராமனின் கருணை உள்ளம் தெரிகின்றது. ஏனெனில் பாகவதத்தில் மாம்ஸபக்ஷிணிக்குத் தண்டனை கூறப்பட்டுள்ளது;

"यस्त्विह वा उग्रः पशून् पक्षिणो वा प्राणत ।
उपरन्धयति तमकरुणं पुरुषादैरपि विगर्हितममुत्र ॥
यमानुचराः कुम्भीपाके तप्ततैले उपरुन्धयति"

"எவனொருவன் பசு, பக்ஷிகளை உயிருடன் கொன்று உண்கிறானோ அவனை யமதூதர்கள் கும்பீபாகமென்ற நரகத்திலும், காய்ச்சப்பட்ட எண்ணெய்யிலும் போட்டு ஹிம்ஸிப்பார்கள்" என்று. அத்தகைய பிறப்பில்பிறந்த ஜடாயுவிற்கு இராமனின் கருணையால் மோக்ஷம் கிடைத்தது

இராமன்—லக்ஷ்மணன் இருவரும் ஜடாயுவின் கர்மாக்களை முடித்துக்கொண்டு. கோதாவரியில் ஸ்நானம் செய்து விட்டு, மேற்கு திக்கை நோக்கிப் புறப்பட்டார்கள்.

க்ரௌஞ்சாரண்யத்தைத் தாண்டி மதங்காச்ரமத்தைக் குறித்துச் சென்று கொண்டிருக்கும் பொழுது நடுவில் பயங்கரமான உருவமுடைய அரக்கி இலக்ஷ்மணனைத் தழுவி தன்னோடு ஊடல் செய்ய வேண்டுமென்று கேட்க, இலக்ஷ்மணன் அவ்வரக்கியை யாரென்று கேட்கிறான். அவ்வரக்கி தன்னை அயோமுகி என்ற பெயருள்ளவள் என்று கூற, உடனே இலக்ஷ்மணன் அவளின் மூக்கையும், நகிலையும் அறுத்தான். அப்பொழுது அவள் திவ்ய ரூபமடைந்து மறைந்து விட்டாள். அயோமுகியின் வரலாற்றை வால்மீகி சுருக்கமாகக் கூறிமுடித்து விட்டார்.

கம்பரோவெனில் ஒரு படலமே பாடி விட்டார். இராமனுக்குத் தாகம் எடுக்க, அதற்காக தண்ணீர் கொண்டுவரச்சென்றபொழுது அயோமுகிஎன்ற அரக்கி லக்ஷ்மணனை காமுற்ருள் என்று கம்பர் கூறுகிருர்.

அப்பாடல் கீழ்வருமாறு,

"எங்கணும் நாடினன் நீர் இடைகாணுன்
சிங்கமெனத் தமியன் திரிவானை
அங்கவனத் துளயோமுகி யான
வெங்கணரக்கி விரும்பினள் கண்டாள்"

என்று.

இலக்ஷ்மணன் அரக்கியுடன் பேசிக் கொண்டிருப்பதால் ஏற்பட்ட காலதாமதத்தை நினைத்துஇராமன் வருந்தி தன்னை மாய்த்துக் கொள்ளமுற்படும் பொழுது, இலக்ஷ்மணன் அரக்கியைத் துன்புறுத்தும் சப்தத்தைக் கேட்டு ஆக்னேயாஸ்த்ரத்தைத் தொடுக்க, அவ்வமயம் இலக்ஷ்மணன் திரும்பி வருதலும் இலக்ஷ்மணனைக் கண்டு இராமன் மகிழ்தலும் கூறப்பட்டுள்ளன.

துளசிதாஸர் அயோமுகி வர்ணனைக் கூறவில்லை. அத்யாத்ம இராமாயணத்திலும் அயோமுகி வர்ணனைக் கிடையாது.

அயோமுகியை கர்வபங்கம் செய்துவிட்டு இலக்ஷ்மணனும், இராமனும் புறப்பட்டு அடுத்த காட்டிற்கு வந்தார்கள். வரும்வழியில் கெட்ட சகுனம் ஏற்பட்டது. அதைக் கண்டு அஞ்சியவர்களாக நடையைத் தொடருகிருர்கள். இவ்விதம் வந்து கொண்டிருக்கும் பொழுது ஒரு பெரிய உருவத்தைப் பாாத்தார்கள்.

"ददर्श सुमहाकायं राक्षसं विपुलोरसम् ।
विवृद्धमशिरोग्रीवं कबन्धमुदरेमुखम् ॥"

தலை — கழுத்து இல்லாத வயிற்றிலேயே முகமுள்ள ஒரு மலை போன்ற உருவத்தைப் பார்த்தார்கள். அந்த உருவத்தின் தலை, வாய், வயிறு எல்லாம் ஒரே இடத்தில் இருந்தாலும் ஒரு மைல் நீளமுள்ள இரண்டு கைகள் மட்டும் அசைந்து கொண்டிருந்தன. இதைப் பார்த்து ஏதோ அரக்கன் என்று அறிந்தார்கள். கபந்தன் என்ற அவ்வரக்கன் இராம லக்ஷ்மணகளைப் பிடித்து இழுத்து; நீங்கள் இருவரும் யார்? எங்கே? வந்தீர்கள்? என்று கேட்க அவர்கள் விபரம் சொல்ல, கபந்தன் இராம இலக்ஷ்மணர்களை விழுங்க முற்படும் பொழுது, இருவரும் அவனுடைய நீண்ட கைகளை ஒவ்வொன்ருக வெட்ட கபந்தன் மேகம்போல் ஆகாயத்தில் நின்ருன். அப்பொழுது கபந்தன் தன் வரலாற்றைச் சொல்கிருன்.

"இராம! முன்னொரு காலத்தில் மிகவும் சுந்தர புருஷனை நான் ரிஷிகளைப் பயமுறுத்தி ஹிம்சித்துக் கொண்டு இருந்தேன். ஸ்தூலசிரஸ் என்ற முனிவர் கோபமடைந்து என்னை இவ்விதம் சபித்து விட்டார். சாப விமோசனம் தாங்கள் இருவரும் என் கைகளை வெட்டும் பொழுது ஏற்படுமென்றும் கூறினார். மேலும் நான் சும்மா இருக்காமல் பிரம்மாவைக் குறித்துத் தவம் செய்தேன். அவர் எனக்கு நீண்ட ஆயுளைக் கொடுத்தார். அதைக் கொண்டு இந்திரனை ஹிம்சித்தேன். இந்திரன் வஜ்ராயுதத்தால் அடிக்க அப்பொழுது தலை வயிற்றுக்குள் போய்விட்டது. உடனே இந்திரனைக் குறித்துப் பிரார்த்தித்தேன். நீண்ட ஆயுளைப் பெற்ற நான் எப்படி ஆஹாரமில்லாமல் வாழமுடியும் என்று இந்திரன், எனக்கு இந்த நீண்ட கரங்களைக் கொடுத்து இதற்கு அருகில் வரும் உயிர்களை பிடித்து உண்ணுவாய் என்று அருள் புரிந்தான். இப்பொழுது தனு என்ற பெயருள்ள நான் உங்களால் விமோசன மடைந்தேன்" என்ருன். இராமனும் தன்வரலாற்றைக் கூறி 'சீதையை

விட்டுப் பிரிந்து விட்டேன். சீதையை ஜன ஸ்தானத்திலிருந்து யாரோ எடுத்துச்சென்று விட்டார்கள். அவர்கள் யாரென்று தெரிய வில்லை, உனக்குத் தெரிந்தால் சொல்' என்றான்.

கபந்தன் என்ற தனு ''இராம! எனக்குச் சரியாக ஞாபகமில்லை. ஆனால் நீ என்னைத் தகனம் செய்து விடு. பிறகு எனக்குத் திவ்ய ரூபம் ஏற்படும். அப்பொழுது எனக்கு ஞாப கம் வரும், கூறுகிறேன்'' என்று சொன்னான்.

இராமன் தனுவைத் தகனம் செய்ய, திவ்யரூபமடைந்த அவன் எல்லா விபரத்தை யும் கூறுகிறான். ''இராம! சீதையை இராவ ணன் எடுத்துச் சென்றுள்ளான். பம்பாநதிக் கரையில் ருஷ்யமூக பர்வதமென்று ஒன்று இருக்கிறது. அங்கு சுக்ரீவன் என்ற வானர அரசன் நான்கு மதியூகி மந்திரிகளுடன் அரசாட்சி செய்கிறான். அவனை நண்பனாக்கிக் கொள். அவனுக்குச் சில கோரிக்கை கள் உன்னால் ஆக வேண்டியிருக்கிறது. அவைகளை நீ செய்து வை: அவன் உனக்குச் சீதையைத் தேடித் தருவான்'' என்ற விப ரத்தைக் கூறி ஸ்வர்கலோகமடைந்தான். கம்பராமாயணமும் அத்யாத்யராமாயணமும் வால்மீகியைப் பின்பற்றியே சென்றுள்ளன. வால்மீகியும், கம்பரும் கபந்தனுக்குச்சாபம் கொடுத்தது ''ஸ்தூல சிரஸ்'' என்ற முனிவர் என்று கூறுகின்றார்கள்.

அத்யாத்ம ராமாயணத்தில்,

''अष्टावक्रं मुनिं दृष्ट्वा कदाचिदहेसं पुरा ।
क्रुद्धोऽसावाह दुष्टत्वं राक्षसो भव दुर्मते ॥''

அஷ்டாவக்ரர் என்ற முனிவர் சபித்த தாகக் காணப்படுகிறது.

துளசிதாஸர்,

''दुर्बासा मोहि दीन्ही सापा ।
प्रभु पद्पेखि मिटा सो पापा ॥''

துர்வாஸ முனிவர் சாபம் கொடுத் ததாகக் கூறுகிறார். ஆனால் கபந்தனின் வர லாற்றை வால்மீகி, கம்பர், அத்யாத்ம ராமா யணம் இம்மூன்றும் அதிகமாகக்கூறியுள்ளன. துளசிதாஸர் ஒரே வரியில் முடித்துவிட்டார்.

(தொடரும்)

## கவனிக்கவும்

மணியார்டர் கூப்பனில் (Money Orders) சந்தாத்தொகை அனுப்பும்போது, சந்தா எண்ணைக் குறித்து அனுப்பவும். சந்தாதாரர்கள் தங்களுடைய புதிய எண்ணை ஸப்தகிரி மாத வெளியீடு உறையில் (Cover) கவனிக்கவும்.

ஆசிரியர்:

# சந்தாதாரர்களுக்கு ஓர் விண்ணப்பம்

* * *

## ஸப்தகிரி மாத இதழ் ஆண்டு சந்தா ரூ. 6/—

1975 ஆம வருடம் ஜனவரி மாதத்திலிருநது சநதாதாரர்களின் சந்தா எண்கள் மாற்றப்பட்டுள்ளன. 31–5–75 தேதியுடன் சந்தா காலம் முடிவடையும் சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. ஆகவே அவ்வெண்கள் உடைய சந்தாதாரர்கள் தங்கள் புதிய எண்களை குறித்துக்கொண்டு தாங்கள் செலுத்த வேண்டிய தொகையைச் செலுத்தி தங்கள் சநதாவைப் புதுப்பித்துக கொள்ளவும்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 19 | 86 | 190 | 258 | 303 | 404 | 5-60 |
| 37 | 87 | 193 | 259 | 320 | 406 | |
| 70 | 88 | 197 | 261 | 322 | 407 | |
| 74 | 90 | 203 | 262 | 323 | 420 | |
| 78 | 92 | 204 | 264 | 324 | 434 | |
| 80 | 101 | 205 | 265 | 328 | 515 | |
| 81 | 113 | 206 | 293 | 332 | 516 | |
| 82 | 115 | 215 | 296 | 397 | 528 | |
| 83 | 142 | 216 | 298 | 399 | 529 | |
| 84 | 146 | 220 | 300 | 400 | 572 | |
| 85 | 182 | 257 | 301 | 401 | | |

| | | | | |
|---|---|---|---|---|
| 77 | 403 | 503 | 511 | 6-00 |
| 318 | 496 | 504 | 512 | |
| 319 | 497 | 505 | 513 | |
| 389 | 498 | 506 | 514 | |
| 390 | 500 | 507 | 562 | |
| 391 | 501 | 508 | 582 | |
| 395 | 502 | 509 | 629 | |

மாத இதழுக்குச் சம்பந்தப்பட்ட பணததை, மணியார்டர் மூலமாக, ''ஆசிரியர்' தி. தி. தேவஸ்தானம், திருப்பதி. (A. P)'' என்ற முகவரிக்கு அனுப்பவேணடும். செக் மூலமாகவோ, அல்லது தவறுதலான முகவரிக்கோ அனுப்பும்படியான பணத்தைப் பற்றிய விவரங்களுக்கு அலுவலகம் எந்த விதமான பொறுப்பும் ஏற்காது என்று இதனால் அறிவிக்கப்படுகிறது.

ஆசிரியர்.



## கவனிக்கவும்

''ஸப்தகிரி'' அட்டையின் மீது குறிக்கப்படும் தங்கள் புதிய சந்தா எண்களையே இனிமேல் சந்தாதாரர்கள், கருத்திற்கொள்ள வேண்டுமென்று பணிவுடன் கேட்டுக் கொள்ளப் படுகிறார்கள்.

ஆசிரியர்.

# தமிழ் நூல்கள்

திருமலை - திருப்பதி தேவஸ்தானத்தில குறைந்த விலையில் கிடைககும் தேவஸ்-தானத்தாரின் சமய வெளியீடுகளை வாங்கிப பயனடையுங்கள்.

1. ஸ்ரீவேங்கடேஸ்வரா அஷ்டோத்ர சகஸ்ரநாமம். தமிழ் எழுத்துப் படியும் உள்ளது. ... 1-00

2. தி. தி. தேவஸ்தான மாத இதழ்: 1955, 1957 தொகுப்பு ஒன்று ... 3-00

3. பால சரிதம ... 0-75

ஆசிரியர்: பாஸ மகாகவி
தமிழில் மொழிபெயர்ப்பு: திரு. சீனுவாசராகவாச்சாரியா, B.O.L.

4. பால பாகவதம் முதல பாகம் ... 4-00
இரண்டாம் பாகம் ... 4-00

ஆசிரியர்: திரு. செவ்வை சூடுவாா
பதிப்பாசிரியர்: திரு. உ. வே. சுவாமிநாத ஐயர்

5. தசரூபகம் ... 3-50

தனிகரின் விளக்கவுரையுடன் கூடியது

6. குருபரம்பரை ... 3-00

ஆசிரியர்: அழகிய நம்பிதாசர்
பதிப்பாசிரியர்: திரு. கோ. பால சுந்தர நாயகர், M. A.,

7. ஆழ்வார்களின் மங்களாசாஸன பாசுரங்கள் ... 3-00

திரு. டி. கோ. வி. என். சுதர்ஞச் சார்யா அவர்களின் விளக்க வுரையுடன் கூடியது.

8. இராமஜெயத்திருப்புகழ் ... 3-00

ஆசிரியர்: பாலபாரதி
பதிப்பாசிரியர்: திரு. கே. பால சுநதர நாயசா

9. சுப்ரபாதம் (பொருளுடன்) ... 0-50

தமிழிலும் எழுத்துப்படி கொடுக்கப்பட்டுள்ளது.

10. சுப்ரபாதம் ... 0-12

11. ஸ்ரீ ஸித்தாந்த த்ரய சங்ரஹம் ... 0-75

ஆசிரியர்: மகா மஹோபாத்யாய திரு. உ. வே. கபிஸ்தலம் தேசிகாச்சார்யா

12. செம்பொருள் ... 1-50

ஸ்ரீ பிள்ளை லோகாச்சார்யாவின் விளக்கவுரையுடன் கூடியது

13. சங்கர விலாஸம் ... 2-44

பதிப்பாசிரியர்: திரு. டி. பி. பழனியப்பாபிள்ளை

14. மகாபாரதக் கதைகள் ... 1-25

ஆசிரியர்: திரு. ஆர். சீனுவாச ராகவாச்சார்யா சிரோமணி

15. திருக்குறள் பொருட்பால் ... 7-50
காமத்துபால் ... 4-00

ஆசிரியர்: திருவள்ளுவர்
காளிஞர், பலிப்பெருமாள் ஆகியவர்களின் விளக்கவுரைகளுடன் கூடியது.

16. திருவாய்மொழி விளக்கவுரையுடன்

முதல் பாகம் ... 7-50
இரண்டாம் பாகம் ... 10-50

திரு. கே. பாலசுந்தர நாயகர் அவர்களின் விளக்க வுரையுடன் கூடியது

17. திருவேங்கடவன் 108 திருநாமங்கள் ... 2-50

ஆசிரியர்: திரு. கோழியாலம் சடகோபசாரியர்

18. யாப்பொளி ... 3-50

ஆசிரியர்: திரு. ஆர். சீனு வாச ராகவாச்சார்யா

19. ஸ்ரீ கபிலேசுவரசுவாமி சுப்ரபாதம் ... 0-20

ஆசிரியர்: முள்ளண்டரம் திரு எம்.வி. இராமநாத கனபாடிகள்

ரூ. 100 அல்லது அதற்கு மேற்பட்டோ, புத்தகங்களைவாங்குபவர்களுக்கு, 12½ சதவீதம் தரகு சலுகை தரப்படும். மேலும் எங்களிடம் திருவேங்கடவன், பத்மாவதி அம்மையார் வண்ண உருவப்படங்கள் வெவ்வேறு அளவுகளில் விற்பனைக்குக் கிடைக்கும். காசோலைகள் ஏற்கபடமாட்டாது. முழுவிபரங்களுக்கு கீழ்கண்ட முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.

ஆசிரியர்
''ஸப்தகிரி''
தி. தி. தேவஸ்தானம்
திருப்பதி.



## விண்ணப்பம்

தத்துவ நூல், மத சம்பந்தமான புத்தகங்கள், இலக்கியங்கள் முதலியனவற்றை, யாத்திரீகர்கள் இலவசமாகப படிப்பதற்குத் திருமலையில் அமைக்கப் பட்டிருக்கும் திருமலை - திருப்பதி தேவஸ்தான நூல் நிலையத்திற்கு இலவசமாக அனுப்பினால மகிழ்ச்சியுடன் வரவேற்கப்படும்.

**Executive Officer,** T. T. Devasthanams, Tirupati.

# வேதம் தமிழ் செய்த மாறன்

திரு. கே. வி. இராஜன்,
மதுரை - 12.

'' நசிக்கு மொன்றி னுதரத்தே
சிறிது பிறப்பிஞனகதுவும
புசிக்கு மெதனே யாங்குறையும
புகலவாய பெரும! எனவேண்டப்
'புசிக்கு மதுவே யுறைவிடமும்
அதுவேயாகு' மென்றனனே
பசிக்கும் நசைககு மெட்டாத
பரமன் பவள நகையோடே ''

பிறநதது முதல பேச்சு மூச்சற்ற சடமாக இருநது, பிறகு தமககேற்ற சீடன் ஒருவனே பதினூரும் வயதில கண்டவுடன் கடல்மடை திறநததுபோல், வேதசாரமாய், ஸ்ரீமந் நாருயணனேப்பாடி அருளிய ஞான வடிவம் தான் சடகோபர் என்ற நம்மாழ்வார். மதுர கவி வாய் புதைத்து 'சேய் உகக்குமாறு திருச்செவியில் ஒரு வசனம் என்று' செத்தது வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும் என்ற கேள்விக்கு, மௌன விரதம் கலைநது, மோனவாய் திறந்து இடிமுழக்கம் போல் அத்தைத்தின்று அங்கே கிடக்கும் என்றது பக்தி, சரணுகதி, சமர சம் என்ற தத்துவங்களுக்கெல்லாம் இலக கணம் வகுத்த நம்மாழ்வாரை போற்றி வணங்குமுன், அவரைப் பேச வைத்த புண்ணி யனே ஆராயத்தான் வேண்டும்.

தமிழகத்திலிருந்து ஒருவர் உத்திர தேச யாததிரையை மேறகொண்டு, அயோத்திக குச் சென்று, யோக நிஷ்டையில் அமாந்தி ருந்தார் வேத வேதாங்க நூல்களிலும், யோக நூல்களிலும், வடமொழியிலும் நன்கு பயிற்சிப் பெற்றவர். திருமாலே எல்லா க்ஷேத்திரங்களிலும் கண்குளிரக் கண்டு சமய உண்மைகளின் ஸாரத்தை ஞான மார்க்கத்துடன் ஆறிய தவித்தது இவர் மனம. காமம, வெகுளி, மயக்கம என்ற முப்பகைகளேயும் வென்று, கடுந்தவமிருந்து, உடம்பையும் உள்ளத்தையும் அடக்கி காய் கனி சரகுகளிலே ஜீவித்துவந்தார். பிறகு காற்றை அருந்தி கதிரவன் ஒளியையே அமு தாகப் பருகிஞர். இவரது யோகநிஷ்டை நாளடைவில் மோனத் தவமாய் முற்றி, உள்ளம் திருமாலின் திருவடியை நாட, அந்த அருளுக்கு உரிய பெருநெறி காட்டும் குருமூர்த்தியைத் தேடி நின்றது. ஒரு நாள் தென்பால் தோன்றிய ஒரு கோடி சூரியன் என்றுதித்த அற்புதத்தை சோதிக்க வேண் டும் என்று புறப்பட்டார் அவர். அந்த திவ்ய ஒளியை குறியாய்க் கொண்டு நடக்க, தாம்பிரபரணி தீரத்தில் உள்ள குரு கூருக்கு வந்தவுடன் அந்த ஜோதி மறைந்து விட்டது. 'பொலிந்து நின்ற பிரான' என்ற ஆதிநாத ஸ்வாமி கோயிலில் உள்ள புளிய மரத்தடி யில் ஜோதி புகுந்ததாகத் தோன்றியது.

பொழுது புலர்ந்ததும், சங்கணி நீர்த் துறையில் மூழ்கி எழுந்தபின், அங்கே அருகில் இருந்தவர்களே நோக்கி, இந்த ஊரில ஏதா வது விசேஷம் உண்டோ என்று வினவ, அவர்கள் தங்கள் அரச குமாரனேப்பற்றி எல்லாம் சொல்லி ''சேய் என்ருல் சேயோ, செழுமணிதான் கொண்ட நோய், பேய் என் ருல் பேயும் அன்று. பேச அரிதாம்'' என்ருர் கள். இதைக் கேட்ட அப்பெரியவர் அச் சிறுவனேப் பாாக்க விரும்பி, காரியாரின் விருப்பத்திற்குக் காத்திருந்தார். மறைந்த ஜோதியை மறக்க முடியாமல் கோயிலே நோக் கிப் புறப்பட்ட பெரியவரை அரசர் எதிர் கொண்டழைத்துச் சென்ருர். சிறுவனேக்

கண்டவுடன் இச்ஜோதியோ என் இதயத்தை உருக்கியது என்று ஆடிப்பாடி அங்கும் இங்கும் ஓடினார். திருமாலே தமக்கு ஞானோபதேசம் செய்யவேண்டும் எனறு இவ்வுருக் கொண்டு வநதது என்று கூறி நிலைவணங்கி, மெய் ஒடுக்கி, நீதி நெறியாக தலைவணங்கி நின்றார். பிறநதவுடன அழாமல், கண் திறக்காமல் கைகால் அசைக்காமல், தாய்ப் பால் அருகாமல், வாட்டமின்றி உயிருடன் ஆனால் பொலிவுடன் இருந்த சேயை, காரியும் உடைய நங்கையும் கனவுலகில் அநேக காட்சிகளுடன் கண்டாாகள். குழந்தைக்கு சிறு தேர் தொட்டில் வநது விட்டதாக கனவு காணபார்கள். பெண் குழந்தைகள் சிறு வீடு கட்டுவதை ஆண் குழந்தைகள் அழித்து விளையாடும் துஷ்டத்தனத்தை தன் குழந்தையிடம் காண ஆசைப்படுகிறது தாயுள்ளம். இந்த என் பிள்ளையையும் மணக்கோலத்தில் பார்ப்பேனு என்று தவித்தாள் உடைய நங்கை. கண்களைத் துடைத்துக்கொண்டு 'நீ ஊமை என்று ஊரார் நகைப்பார்களே. நீ தவழக் கண்டு நான் மகிழ்ச்சியடைவதற்கில்லையே' என்று துக்கத்துடன் சிவிகையில் ஏறிக்கொண்டு ஆதிநாத பெருமாள் ஸந்நதிக்குச் சென்றார்கள். ஆண்டவனிடம் தங்கள் குறையைக் கூறி முடிப்பதற்குள் தவழ ஆரம்பித்தது குழநதை.

கோயிலுக்கு வடதிசையில் இருந்த புளிய மரத்திற்கே விரைந்து தவழ்ந்து பத்மாசனம் இட்டுத் தெற்கு முகம் நோக்கி அமர்ந்தது குழந்தை உணவின்றி அசைவற்றிருந்தும் வயதுக்குத் தகுந்த வளர்ச்சியை ஆச்சர்யமாய் பெற்றுவந்தது. இந்நிலையில் தான் அந்தப் பெரியவர் கேட்ட கேள்விக்கு விடை பகர்ந்து, தனக்கு முன் திருக்கோளூரில் விஷ்ணுக்சேனர் என்ற அந்தணர்க்கு புதல்வராய் பிறந்தாலும், மதுரகவிக்கு ஞான தேசிகர் குருவானார்.

இராமனுஜர் முதல் முதல் ஆழ்வார் திருநகரியை அடைந்தபோது, 'இதுவோ திருநகரி, இதுவோ பரமபத எல்லை. இதுவே தான் வேதம் தமிழ் செய்து மெய்ப்பொருட்கு முப்பொருளாய் ஓதும் சடகோபன் ஊர்' எனறு பாடினாராம். இராமனுஜர் நம்மாழ்வாரைத் தெயவமாக மதித்து வழிபட்டார் என்பது பாட்டின் உட்பொருள். உள்ளுறையும் அழகனுகிய பரமாத்மாவைப் புற உலகிலும் அழகிய மணவாளனுகக் காட்டி 'ஆன்மாவாகிய பெணணே, இந்த புருஷோத்தமனை மணந்து வாழ்வாய' என்று உபதேசிக்க வந்தார்.

பாண்டிய பேரரசு வீழ்ந்து விட்டது. சோழப் பேரரசு இன்னும் ஓங்கவில்லை. முடிகள் உருண்டன. சிங்காதனங்கள் புரண்டன. இத்தகைய இருணட காலத்தில்தான், இருளைக் கிழித்து ஜோதியாகத் தோன்றியவர் நம்மாழ்வார். இத்தகைய நெருக்கடியான நிலையில் மக்களுக்கு ஒரு பெருநெறி காட்டிய இப்பெரியார், ஒனபதாம் நூற்றுண்டின் பிற்பகுதியில் அவதரித்தார் என்று கூறுகிறார்கள் சரித்திர ஆராய்ச்சியாளர்கள். பதினாறு வயது வரை உலகமே தெரியாத இவர் செந்தமிழ் நடையில் பாடுகிறார். காதல் துறையிலும் பக்தி துறையிலும் எல்லையைத் தொடுகிறார். பகவானுடைய கலியாண குணங்களில் ஆழ்ந்தவர்கள் ஆழ்வார்கள் எனபது வைணவர்கள் கொளகை. ஸ்ரீரங்க நாதரால் 'நம்மாழ்வார்' என்று அன்பாக அழைக்கப் பெற்றதால் இவருக்கு நம்மாழ்வார் என்ற திருப்பெயர் ஏற்பட்டது.

நம்மாழ்வார் முப்பத்தைந்து ஆண்டுகள் வரை குருகூரில் எழுந்தருளியிருந்தார். பதினாறு வயதில் பாட ஆரம்பித்தவர் இறைவனுடைய அழகிய குணங்களை அனுபவித்த வண்ணம் இடை இடையே தம்மை மறந்து

இருப்பார். அத்தகைய காலங்களில் மதுர கவி பெரும் பொறுமையுடனும் பரமபக்தி யுடனும் பணி செய்து கொண்டிருப்பார். பிறகு உணர்ச்சி உண்டாகி நம்மாழ்வார தொடர்ந்து பாடுவார். இப்படி நான்கு பிரபந்தங்களையும் பாடி முடிக்க பத்தொன் பது ஆண்டுகள் ஆயின என்பர். பதினறு ஆண்டுகளாய் பாதுகாத்து தம்மிடம் ஒப் படைத்த பரமஞான மேதையை சீடரான மதுரகவி தாமே தாய் தந்தையர் நிலையிலி ருந்து பத்தொன்பது ஆண்டுகள் பாதுகாத்து வநதாரென்பது பக்தர் பெருங்கதைகளில் வேறு எஙகும் காணுத ஓர் அதிசய நிகழ்ச்சி யாகும்

திருமால் லக்ஷ்மியுடன் நம்மாழ்வாரின் அகக்கண்ணுக்கு இலக்காகி என்னைப்பாடு என்று வற்புறுத்திப் பாடச்செய்தாரென்றும் பல திருப்பதிகளிலும் எழுந்தருளியிருக்கும் மூர்த்திகள், ஆழ்வார் வீற்றிருநத திருப் புள்யில் வந்திருநது, என்னைப்பாடு, என் னைப்பாடு என்று மன்ருடி இந்த வள்ளலின் மணி வாயிலிருந்து பிறந்த சுந்தரத் தமிழால் புகழ் பெற்றூர்களென்றும் கூறப்படுகின்றது. இந்த வைபவத்தைக் கூறும் பொழுது திவ்ய சூரிசரிதம், ஏனைய குருபரம்பரைகளில் காணப்படாத செய்திகளையும் தெரிவிக்கிறது. ஆண்டாளின் கலியாண விஷயமாய் பெரியாழ்வார், நம் மாழ்வார் அனுமதி பெற்று இவர் திரு முன்பே அந்தத் திருமணத்தை நடத்த வேண்டும் என்று தீர்மானித்து பெரி யாழ்வார் கோதையுடனும் தமது சீடர் வல்லபதேவ பாணடியன் என்பவருடனும் குருகூரை அடைந்து தணடனிட்டு நினறூர் களாம் பிறகு சடகோபர் சுயம்வரம் அமைத்து கோதையை அழகிய மணவாள னுக்கே திருமண புரிய உதவினூராம்

பெருமாள் இவர் ஞானக்கண்ணுக்குப் புலனுகவே, அந்தத் திருமேனி அழகை சேவித்து அந்த திவ்ய குணங்களை அனுபவிக் கும் அனுபவம் உள்ளடங்காமல் பிரபநத ரூபமாய் தன்னை வெளியிட்டுக் கொண்ட தாம். இவருடைய திருவிருத்தம் ரிக்வேதத் தின் ஸாரமென்றும், திருவாசிரியம் யஜுர் வேதத்தின் உட்பொருளைத் தழுவியது என் றும, பெரிய திருவந்தாதி. அதர்வண வேதத்தை அனுசரித்தது என்றும், திருவாய் மொழி ஸாம வேதத்தை தழுவியதென் றும் கூறுவர். நம்மாழ்வாரின் பாசுரங்கள் இராமனுஜருககு வழிகாட்டி, மற்றவர்களைத் திருத்துவதற்கு உபயோகமாயிருந்தது என் பது திருவரங்கத்தமுதனூர் கருத்து. தமது ஞானபக்திக்குத் தாயும் தந்தையும் சட- கோபரே என்று கூறும் மதுரகவிகள் தமக்கு அருள் செய்த ஆழ்வாரின் வாக்கை எட்டுத் திக்கில் உள்ளவர்களும் கேட்டு பேரின்பம் அடையவேண்டும் என்று ஆசைப்படுகிறூர். வாழ்க்கையின் பயனை கூறும் பொழுது,

'' உயர்வு அற உயர் நலம்
உடையவன் யவன் அவன்,
மயர்வு அற அமரர்கள்
அருளினன் யவன் அவன்,
அயர்வு அறும் அமரர்கள்
அதிபதி யவன அவன்,
துயர்வு அறு சுடர்அடி
தொழுது எழு, என் மனனே! ''

—திருவாய் மொழி.

இதன் பொருள் பின்வருமாறு:

''இறைவன் திருவடிகளிலே நித்திய மான பணிபுரிந்து உய்வு பெருவதறகு வாருங் கள். இந்தக் கைங்கரியத்துககு மரணமும் குறுக்கே நிற்காது. நமக்கு விரோதி 'மயர்வு' எனற அஞ்ஞானம். இந்த மயர்வு இல்லாத மதிநலம் பெறுவதற்கு அவன் அருளே உபா யம். இறைவனது குணங்களில் ஈடுபட்டு, அவனுககு உகந்து தொணடு புரிவதே வாழ்க் கையின் பயன்''.

பக்தர்களிடையே ஏற்றத்தாழ்வு இல்லை. 'குலம்தரும்' என்பதில் திருமங்கைமன்னன் பிறப்பல்ல, பக்தியே சிறப்புடன் உண்மை யான குலத்தைத் தரும் என்று கருதுகிறார்.

நம்மாழ்வார் பகத குலமே பெருங்குலம் என்பதற்கு,

" குலந்தாங்கு சாதிகள் நாலிலும்
கீழ் இழிந்து எத்தனை
நலந்தான் இலாத சண்டாளசண்
டாளர்கள் ஆகிலும்
வலந்தாங்கு சக்கரத்து அண்ணல்
மணிவண்ணற்கு ஆள்என்றுஉள்
கலந்தார் அடியார் தம்அடி
யார் எம் அடிகளே! "

என்று சண்டாள சண்டாளர்களாயினும் அடியார்க்கு அடியவரே எனக்குத் தலைவராவர் என்கிறார். "ஒன்றுண்டு செங்கண்மால், யான் உரைப்பது உன் அடியார்க்கு என் செய்வேன் என்றே இருத்தி நீ" என்பதில், ஈசுவரன் தன் அடியார்க்கு எவ்வளவோ நன்மைகளைச் செய்து கொண்டிருந்தும் இன்னும் என்ன செய்வோம் என்று எண்ணிக் கொண்டிருக்கிறானும். அதை நினைத்து ஊறிக் கிடக்கும் சிந்தை எல்லாவற்றைக் காட்டிலும் சிறந்தது என்கிறார். பக்தி பேரின்பத்தில் மூழ்கியிருப்பதை விட்டு, மோட்சத்தை பெற்றுக் கொள்ளும் நோக்கம் மெய்ஞ்ஞானியரிடம் காணப் படுவதில்லை: 'ஊனில் உயிரில் உணர்வினில், நின்ற ஒன்றை உணர்ந்தேனே' என்பதில் எல்லாவற்றிற்கும் எவர்க்கும் முன்தோன்றிய திருமாலே சிவனாகவும் பிரமனாகவும் காட்சி வழங்குகிறான். ஆழ்வாரையும் தானாகக் கொண்டு தரிசனம் தருகிறான். இவர் உணர்விலே கலந்து உயிரிலும் கலந்து உடம்பிலும் கலந்து தித்திக்கும் ஒரு பொருளாகப் பரம் பொருளை இவர் உணர்ந்து இன்புறுகின்றார். இந்தத் தெய்வக் காட்சியில், நீங்களும் இந்த அனுபவத்தில் பங்கு கொள்ள முன் வாருங்கள் என்று பிறருக்கு உபதேசம் செய்கிறார்.

" மேகங்களோ! உரையீர், திரு
மாலதிரு மேனி ஒக்கும
யோகங்கள் உங்களுக்கு எவ்வாறு
பெற்றீர்? உயிர் அளிப்பான்
மாகங்கள் எல்லாம் திரிந்து, நன்
னீர்கள் சுமந்து, நும்தம்
ஆகங்கள் நோவ வருத்தும்
தவமாம் இருளபெற்றதே "

—திருவிருத்தம்.

என்பதில் பகவானது கலியாண குணங்களும் லட்சணமும் பக்தனுக்கு வந்து விடுகிறதாம். இந்த யோகம் இவனுக்கு எப்படி வந்தது என்றால் இந்தத் திருவிருத்தமே இதற்கு விடை பகர்கிறது. லோகோபகார ரூபமான கைங்கரியத்தில் ஈடுபடுவதில் பக்தன் நடமாடும் பெருமாளாக இருக்கிறான். 'அவன் உறங்கும் பெருமாள், இவன் உலாவும் பெருமாள்' என்று உலகம் மதிக்கவாழும் பக்தனுக்கு கைங்கரியந்தான் பரமபுருஷார்த்தம். இந்தப் பாசுரத்தில் வரும் மேகங்கள் பக்தர்களுக்கு அறிகுறி. மேகத்தைத் திருமால் திருமேனியுடன் ஒப்பிடுகிறார்கள். அந்த யோகம் மேகங்களுக்கு வந்த காரணத்தை ஆழ்வார் தெரிவிக்கும் பாணியே தனிச்சிறப்பு. எப்படிபட்சபாதம் இல்லாமல் உயிர்களுக்குப் பணிபுரியவே மேகங்கள் திரிந்து கொணடிருக்கின்றனவோ, அது போலவே, வேறுபாடின்றி, கருணை வெள்ளத்தைப் பொழிகின்றாராம் கார்மேக வண்ணன்.

விஷ்ணு வென்றால் எங்கும் நிறைந்திருக் பரம்பொருள். எங்கும் அந்தர்யாமியாக இருக்கும் திருமாலின் தொடர்பு பெறாத உலகப்பகுதியே இருக்கமுடியாது. அங்ஙனம் எங்கும் நிறைந்த விஷ்ணுவை வழிபடும்

சமயத்துக்கு பூர்ணமான கலையுருவத்தை தமிழ்வேதம் — திருவாய் மொழியில் எளிதில் காண வைத்தது. ஸ்ரீவைஷ்ணவம என்ற பக்தி மதமே ஸாராம்சத்தில் மதுரகவி வாயிலாக நமக்குக் கிடைத்திருக்கும் நம்மாழ்வாரின் அருள் நெறி. இதே கருத்தை ஸ்ரீ வேதாந்த தேசிகரும் "அரும் மறைகள் தமிழ் செய்தான் தானே கொணடு துன்பறற மதுரகவி தோன்றக் காட்டும் தொல்வழியே நல்வழிகள் துணிவார் கட்கே" என்று தமது வாக்கிலே வெளியிட்டிருக்கிருர். ஞான நெஞ்சிலும் மோனவடிவிலும் கருணைக் கடல் போலப் பொங்கி அபயம் அளிக்கும் கையில் தேசிகரின் அதிகார ஞான முத்திரை திகழ்கின்றது. இதனையே,

"வேதம் ஒரு நான்கினையும்
மிக்க தமிழ் நாலடியால
ஓதி உரைததே கருணை
ஓங்கும் கை" —திருக்கை வழக்கம்

என்று போற்றி வணங்குவோமாக.



# அறிவிப்பு



"ஸப்தகிரி" மாதப் பத்திரிகை விற்பனைக்கு ஏஜண்டுகள் இல்லாத இடத்திலிருந்து, எவரேனும் 10 அல்லது அதற்கும் மேலான பிரதிகளுக்கு ஆர்டர் அனுப்பலாம்

ஒரு தடவையாக 25 பிரதிகளுக்கும், அதற்கும் அதிகமான பிரதிகளுக்கும் கொடுக்கும் ஆர்டருககு 20% கமிஷன் கொடுக்கப்படும்.

25 அல்லது அதறகும் மேலான பிரதிகள் வேணடுவோர், ஒரு பிரதிக்கு 40 பைசா விகிதம் முன்னதாக, "ஆசிரியர், ஸபதகிரி, தி. தி தேவஸ்தானம், திருப்பதி." என்னும் முகவரிக்கு மணியாடர் மூலம் பணம் அனுப்பி பிரதிகளைப் பெறலாம்.

10 பிரதிகளிலிருந்து 24 பிரதிகள் வரை ஒன்றுக்கு 0—50பைசா விகிதம் முன்னதாகவே பணம் அனுப்ப வேண்டும்.

# ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி கோயில்
## திருமலை.

## தினசரிபூஜைகள், தர்மதரிசனங்கள் கால அட்டவணை

வரப்போகும் மாதங்களில பகதாகளின் கூட்டம அதிகமாக இருக்குமென் பதால, கூட்டம் குறையுமவரை கீழ்ககண்டவாறு எம்பெருமானின் ஆலய நிகழ்ச்சி நிரல்கள் 1—3—75 முதல மாற்றப்படடுள்ளன.

ஞாயிற்றுக்கிழமை, திஙகட்கிழமை, செவ்வாய்க்கிழமை, புதன்கிழமை, வியாழக்கிழமை, சனிக்கிழமை.

காலை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 2-30 | முதல் | 3-00 | வரை | ... | ஸுப்ரபாதம |
| 3-00 | ,, | 4-00 | ,, | ... | விஸ்வரூப ஸர்வ தரிசனம |
| 4-15 | ,, | 5-00 | ,, | ... | தோமாலஸேவை |
| 5-15 | ,, | 6-00 | ,, | ... | முதல் அர்ச்சனை |
| 6-00 | ,, | 6-30 | ,, | ... | முதல் மணி & சாத்துமறை |
| 6-30 | ,, | 12-30 | ,, | ... | ஸர்வ தரிசனம |

மாலை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 12-30 | ,, | 1-00 | ,, | ... | 2-வது அர்ச்சனையும், மணியும் |
| 1-00 | ,, | 6-00 | ,, | ... | ஸர்வ தரிசனம் |
| 6-30 | ,, | 7-00 | ,, | ... | இரவு கைங்கர்யமும், மணியும் |
| 7-00 | ,, | 10-00 | ,, | ... | ஸர்வ தரிசனம் |
| | | 10-30 | ,, | ... | ஏகாந்தசேவை |

வெள்ளிக்கிழமை

காலை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 2-30 | முதல் | 3-00 | வரை | ... | ஸுப்ரபாதம் |
| 3-00 | ,, | 4-00 | ,, | ... | விஸ்வரூப ஸர்வ தரிசனம் |
| 4-00 | ,, | 6-00 | ,, | ... | காலை கைங்கரியங்கள் |
| 6-30 | ,, | 8-30 | ,, | .. | அபிஷேகம் |
| 8-30 | ,, | 10-30 | ,, | ... | அபிஷேகானந்தாரா தரிசனம் (ஆர்ஜிதம்) |

மாலை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 12-30 | ,, | 1-30 | ,, | ... | தோமால சேவை, அர்ச்சனை |
| 1-30 | ,, | 2-00 | ,, | ... | மணி |
| 2-00 | ,, | 7-00 | ,, | ... | ஸர்வ தரிசனம் |
| 7-00 | ,, | 8-00 | ,, | ... | இரவு கைங்கர்யங்கள் & மணி (ஏகாந்தம்) |
| 8-00 | ,, | 10-00 | ,, | ... | ஸர்வ தரிசனம் |
| | ,, | 10-30 | ,, | ... | ஏகாந்த சேவை |

குறிப்பு:

1. புதன்கிழமைகளில் காலை 7—00 விருந்து காலை 10—00 மணி வரை சகஸ்ர கலசாபிஷேகம் நடைபெறும்.
2. வியாழக்கிழமைகளில், ஸர்வதரிசனம் மாலை 5—30 வரை இருக்கும். பூலங்கிஸேவை இரவு 7—30க்குத் தொடங்கும்.
3. மேற்கூறிய நிகழ்ச்சிநிரல்கள, சிறப்பு நிகழ்ச்சிகளின் தேவையைப் பொருட்டு மாற்றப்படும்.
4. நித்ய அர்ச்சனை கிரஹஸ்தர்கள் முதல அர்ச்சனைக்கு மட்டுமே அனுமதிக்கப்படுவர்.

செயலாட்சித் தலைவர்

திருமலை-திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.



# வடமலை அமுதன்

புலவர் திரு. சி. கோபாலகிருஷ்ணன் (மாயாழ்வார்), திண்டிவனம்

★ ★ ★

1. ஏழுலகும் ஏழ்மலையாய் இவ்வண்ணம் அடைந்ததுவோ?
ஏழ்கடலும் மலைவடிவாய் இருந்திங்கு படிந்ததுவோ?
வாழ் அனந்தன் மலையாகி வந்திங்குக் கிடந்தானோ?
ஏழ்முனிவர் தவஞ்செய்ய இம்மலைகள் அமைந்தனவோ?

2. காலையிளங் கதிரொளியால் கவின்மிகுந்த மலைக்காட்சி
சாலையெலாம் மலைச்சரிவு மரஞ்செடிகள் வளர்ந்திருப்பக்
கோலமலை வேங்கடத்தின் குயிலாலும் சோலையிலே
மால்கொள்ளா மனமுண்டோ? மணிவண்ணா அறியாயோ!

3. மலையேறி நடப்போரும், பேருந்தில் வருவோரும்
உலையாமல் சேர்வதற்கே உனையழைப்பார் 'கோவிந்தா'!
நிலையோனே! வேங்கடவா! நின்கோயில் நின்வாசல்
அலைபோலே அணிவகுப்பார் அடியார்கள் காணாயோ?

4. வானேங்கு மலைகண்டேன்; மணியருவி எழில்கண்டேன்;
தானேங்கு பெரும் பொருளாய்த் தயவருள வல்லானே!
மானேங்கு சோலைகளும், மரமடர்ந்த தாக்குகளும்
கானேங்க மலர்பூத்துக் களிப்பூட்டும் வேங்கடமே!

5. நாடோறும் கோடிமக்கள் நண்ணிடுவார் எழில்காண
காருமலை கடந்தால்தான் கண்ணனைநாம் கண்டிடலாம்
வீடெய்த விரும்புபவர் வினைநீங்க வேண்டாமோ?
தேடிவரும் அடியார்கள் இடர்தீர்ப்பான் வேங்கடவன்

6. அன்புமலை இன்பமலை ஆருயிர்க்கோர் அரியமலை
துன்பமலை நீக்குமலை துயர்போக்கி அருளுமலை
மன்பதைகள் மகிழுமலை மணிவண்ணன் வாழுமலை
புன்பாவம் போக்குமலை புண்ணியஞ்சேர் வடமலையே!

7. மந்தியினம் கொஞ்சுமலை மணமலர்கள் மலரும்மலை
அந்தியிலே அழகுமலை அணியடுக்காய் அமைந்தமலை
சிந்தையிலே மகிழுமலை திருவருள வல்லமலை
எந்தைதிரு வேங்கடவன் எல்லோர்க்கும் அருளுமலை.

8. படிப்படியாய் உயரும்மலை பாரினிலே பெரியமலை
வடித்தெடுத்த இயற்கையெழில் வாய்ந்திருக்கும் எங்கள் மலை
மடிந்திருக்கும் அழகுமலை மலைகளிலே தெய்வமலை
படிந்துவரு பாவமெலாம் பறந்துவிட நிற்குமலை

9. அந்தமலை எநதமலை? அழகுதிரு வேங்கடமே!
சொந்தமென வருமடியார் துயரங்கள் தாமறியார்
வந்தவினை நீங்கிடவும் வளர்காதல் மீதுறவும்
சநததமும் கோவிநதா! கோவிநதா! சாற்றிடுவார்

10. வேதங்கள் இம்மலையாய் வீற்றிருந்த தென்போமோ?
வேதமுதல் பேருருவாய மிளிர்கின்ற தென்போமோ?
தீதில் இறை தெய்வநிலை தெளிவிப்ப தென்போமோ?
மாதவனே திருவருள வாழ்ந்திருக்கும் வேங்கடத்தை.



## ஓர் விண்ணப்பம்

தி. தி. தேவஸ்தான "புத்தக வெளியீடு" பிரிவு, 'ஸப்தகிரி' அலுவலகத்துடன் இணைக்கப்பட்டுள்ளது. ஆகவே தி. தி. தேவஸ்தான வெளியீடுகளான நாள் காட்டிகள், பஞ்சாங்கங்கள், புத்தகங்கள் முதலியவை சம்பந்தமாக கீழ்க்கண்ட விலாசத்துடன் தொடர்பு கொள்ளு மாறு எல்லா பக்தர்களைக் கேட்டுக்கொள்கிறோம். 'மேற்கண்ட வெளியீடு களுக்கான பண அனுப்பீடுகள் எல்லாம், கீழ்க்கண்ட முகவரிக்கே அனுப்பவேணடும்.

ஆசிரியர்.

ஆசிரியர்,
தி. தி. தேவஸ்தானம,
திருப்பதி. (ஆ. பி.)

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER, T. T. D. PRESS, TIRUPATI.

# முக்கிய அறிவிப்பு

மேலாண்மையின் கட்டளைப்படி, திருவேங்கடவன், ஸ்ரீபத்மாவதி அம்மையார் உருவப்படங்களின் விலைப்பட்டியல் கீழ்வருமாறு 24–1–75 மாற்றஞ் செய்யப்பட்டுள்ளன

| உருவப்படங்களின் விவரங்கள் | அளவு | பழைய விலை | புதிய விலை |
|---|---|---|---|
| ஸ்ரீ வேங்கடேஸ்வரர் | 28″×20″ | 2–00 | 3–00 |
| ,, | 20″×14″ | 1–00 | 1–50 |
| ,, | 1 ″×11″ | 0–62 | 1–00 |
| ,, | 11½″×7½″ | 0–25 | 0–50 |
| ,, | 7″×5″ | 0–07 | 0–25 |
| ஸ்ரீ பத்மாவதி | 28″×20″ | 2–00 | 3–00 |
| ,, | 20″×14″ | 1–00 | 1–50 |
| ,, | 15″×11″ | 0–62 | 1–00 |
| ,, | 11½″×7½″ | 0–25 | 0–50 |
| ,, | 7″×5″ | 0–07 | 0–25 |
| ஸ்ரீ வேங்கடேஸ்வரரும் ஸ்ரீ பத்மாவதி அம்மையாரும் | 20″×14″ | 1–00 | 1–50 |
| ,, | 10″×7½″ | 0–13 | 0–50 |
| ஸ்ரீ வேங்கடேஸ்வரர் (வஜ்ரகவசம்) | 20″×14″ | 1–00 | 1–50 |
| ,, | 11½″×7½″ | 0–25 | 0–50 |
| ஸ்ரீ வேங்கடேஸ்வரர் மஹாத்மியம் | 24″×18″ | 1–50 | 1–50 |
| மலையப்ப உபய நாச்சியாருடன் | 20″×10″ | 1–00 | 1–50 |
| முத்துகவசத்தில் ஸ்ரீவேங்கடேஸ்வரர் | 20″×18″ | 1–00 | 1–50 |

செயலாட்சித் தலைவர்,

தி. தி. தேவஸ்தானம், திருப்பதி